உ

சிவமயம்

# ஸ்ரீ மயூராசலபுராணம்,

இஃது

ஸ்ரீமத்ஞானராஜதானியான பொம்மையபாளையம்

பெரியமடம் சிவகஞ்சிமயூராசல நிவாசயதீஸ்வரகர்த்தரான

மயிலம்தேவஸ்தானம் ஆதீனபரம்பரை தர்மகர்த்தத்துவம்

சிவஞானபாலையசுவாமிகள்

கட்டளையைப்பெற்று

கிரந்த குமார சங்கிதையில்சொல்லியபடி

சுப்பிரமணியசுவாமி உபாசனராகிய

விருத்தாசலம்

தியாகராஜகவிராஜர்

இயற்றியதை.

புதுவை-தருமக்கல்விச்சாலைத்தமிழ்த்தலைமைப்புலவை

சாமி - பொன்னுப்பிள்ளை அவர்கள்

பலபிரதிகளைக்கொண்டாராய்ந்து

புதுவை - முத்தியாலுபேட்டை - முத்தைய,

ஐயாசாமிமுதலியாரவர்களால்

பு-சபாபதி. மாணிக்கப்பிள்ளை

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது

.....................

தாது ௵ பங்குனி ௴

# சிறப்புப்பாயிரம்,

இஃது

புதுவை - தருமக்கல்விக்கழகத்துத் தமிழ்த்தலைமைப்புலமை
சாமி-பொன்னுப்பிள்ளையவர்கண்மாணாக்கருளொருவராகிய
கந்தப்பமுதலியாரவர்களியற்றிய-நேரிசையாசிரியப்பா

நிலமகன்முகத்துத்திலகமெனவாங்
கங்கையினவீசம்பாங்குபுகழ்மிகூஉந்
துதிமணிமுத்தநதிவிளிம்புடுத்த
விருத்தகிரியிற்றிருத்தமாவாழுந்
தியாகராசசெம்மனன்குரைத்த
சூர்முதறடிந்தகூர்மிகும்வேலோன்
மலரயன்றன்னைத்தலைமிசைப்புடைத்தோ
னரியருமருகனெறுதிருமுருகன்
வள்ளிதெய்வப்பிடியுள்ளநனிமகிழ்வான்
வதிமயூராசலபதிபுராணத்தை
வம்மினென்றனமிடும்பொம்மையநகரினு
முன்சொன்மயிலைத்தென்மலையதினும்
வீற்றிருந்தருளும்போற்றரும்வீர
சைவசமையசற்குருராயர்
பல்லுயிர்த்தொகுதியும்பயங்கொண்டுய்வா
னல்லருள்சுரக்குநாட்டவானவர்
மானிடவுருவைமறைத்தடியவர்க்கா
மானிடவுருக்கொளுஞானக்கிழவர்
மெய்யைப்பொய்யாவிளங்கப்பகருஞ்
செய்யவாயினர்தெய்வசிகாமணி
தவமுடையவர்க்குறும்பவமதைப்போக்குஞ்
சிவஞானபாலையதேசிகர்பரிவொடு
மெச்சிடவுலகெலா மச்சிட்டதென
வரிதெனப்புகலும்பிரதிபலகொடுவந்து
வாய்ந்தவன்போடாய்ந்துவிளைவினி
லெழுதாவெழுத்திற்பழுதறப்பதித்தன

## சிறப்புப்பாயிரம்

அன்னவன்யாரெனிலறைகுவன்கேண்மதி
நான்முறைபயின்ற நுண்ணறிவாள
ரொன்மறைமுற்றிய நாவினனினிய
வமிழ்தினுமினிக்கும் தமிழ்க்கவிராயன்
கற்றவர்விபக்கு நற்றவக்குரிசி
லெனக்கறிவுறுத்து மனக்களிப்புடையோன்
பல்லவர்செவிதொறுஞ் சொல்லமுதூட்டுங்
கல்விப்பிரசங்கச் செல்வத்தோனறல்
படிக்காதிருந்தும் படித்தவர்போன்று
நடித்தேயிந்த ஞாலத்திற்றிரியுந்
சமகையினமாகக் கங்குசமனையா
னெங்குமபுகழ்பெறுங் கங்கைகுலத்தினன்
மென்னடைப்பெடைசழீஇ யன்னங்கண்படுப்
பொங்குதண்புனற் பங்கயப்படுகருங்
கன்னவென்னவளர் செந்நெற்பணையு
மந்தணராதியர் வறைகூர்மறுகும்
வந்தவாக்கிலையொரு வழங்குநாவீதியு
மருங்கணிசிந்துவு மருந்தளிபந்தியும்
வதுவையுங்குன்றப் புதுவைமாநகரிற்
றருமக்கழகத்துத் தனித்தமிழ்த் தலைமைப்
புலமையெனவே புகன்றிடும்புலவன்
முருகவனவளருஞ் சாமிவள்ளல்
பெற்றெடுத்துவந்த நற்சுதன்சைவ
சமயவிசாரியி லமைவுற்றொழுகுறூஉ
மன்னுநய குணசீலன்
பன்னருந்துதிப் பொன்னுநாவலனே

* * *

திருப்பாதிரிப்புலியூர் - இயற்றமிழாசிரியர்
க. அ. - சிவசிதம்பரமுதலியாரவர்களியற்றிய

ஆசிரியவிருத்தம்.

கார்கொள்ளுங்கடலினிடை யவதரித்தசங்கு
கங்கைராமபாலசித்தர் கலந்துதவம்புரித்திட்
[illegible] ருஞ்சம்பா [illegible] க்கு

## சிறப்புப்பாயிரம்

சீர்கொள்ளுமச்சியற்றித் தருகெனமுத்தையச்
செம்மலருளையாசாமிக் குரிசில்செப்பப்
பேர்கொள்ளும்புதுவைநகர்ச் சாமிபொன்னுப்புலவன்
பெட்புறவாய்ந்தினிது பதிப்பித்தளித்திட்டனனே.



## இலாசுப்பேட்டை-சு. வேலாயுதபிள்ளையவர்களாலியற்றப்பட்டது

### ஆசிரியவிருத்தம்.

ஆதிநடுமுடிவிலானுண்மையறிவானந்த வங்கமுடையான்றனக்கே
யதிகர்சமமானவரிலானருளினுயிர்பொருட் டைந்தொழின்டாத்துமிறைவ
னநாதிமலமுத்தனந்தரியாமியாகியொளி ரானருளு மகனுயிரு
மச்சிவசொரூபமேயிவனென்று மறைசொல்லுமானனலாயுலகிலெலரும்.

ஓசரியமுருகவேண்மெய்யன்பர்கட்கெளிது யுயர்போகமோக்ஷங்களை
யுதவவேவள்ளிதெய்வப்பிடியொடுள மகிழ்ந்துற்றிடமயூராசலத்
தொன்னியதலர்தீர்த்தமூர்த்திமகிமைகடம்மையேயாருமுணருமலின்வழியே
யோங்கியவிருத்தகிரிதன்னிலுறை கவிஞருண்முத்தமணியாகராசன்.

சாதமுற்றிடுமயூராசலபுராணமாத் தமிழானுவாத்தனைத்தைத்
தவமுறும்பொம்மையநகரந்தமபிலே நகர்தமதிப்நாளும்வசித்துத்
தகைமைபெறுமலைவேளைபயாலனுஞ் செயும்வீரசைவசமயாசிரியராஞ்
சகசதிஷ்டாபராசிவஞானபாலைய சாமிகட்டளையின்வண்ணம்.

போதமுறுபுதுவையம்பதியிற்றமிழ்த்தலைமை பூண்டவன்புண்யசீலன்
புலவர்கொண்டாடுமெதிபூதிமிகுமேன்மையன்பொன்னெனும்பெயரினொளி
புகழ்மிகும்பலபிரதிருபங்களைக்கொண்டுபோதநன்குகவாய்ந்து. [ர்வோன்
புனிதமாயச்சியற்றினனதம்பெருமையைப புகலவரிதரிதரோ.*

## பு-அ. பெரியசாமிப்பிள்ளையவர்களியற்றிய

### ஆசிரியவிருத்தம்.

சீர்வளர்மருமத் தொருமுகில்வண்ணன் றிருக்கலரணிதிருவடியார்
செஞ்சடைக்கடவுட் கருட்குருவெனவாந் திகழ்தருமுருகவேட்கன்பன்
மாவளர்விருத்த கிரிவளர்தியாக ராசமானுனைத்திடுமயிலை
மலைப்புராணத்தைப்புலமெலா முணர்வான் வனாதவிவெழுத்திலயவியெனத்
திருவளர்காரத்தார் பொம்மையநகர்வாழ் தனிமுதற்பாலையர்வீர
சைவசற்குருவாய் மலர்ந்தருண்மொழியைத் தலைச்சணியாகவேகொண்டு
குருவளர்புதுவை நகரினன்வாணி குடிகொணாவினன்பொன்னுக்
குரிசில்பல்பிரதி யாய்ந்துதங்கச்சிற் குணமுறவியற்றுவித்தனனே.*

## புதுவை-சு. இராமசாமிமுதலியாரவர்களியற்றிய
### ஆசிரிய விருத்தம்.

பூமேவுகலைமகளுறைவிடப்புறநற் கல்விதனிற்புலமைமிக்க
மாமேவுவிருத்தகிரித்தியாகராசப்புலவன் மகவானுக்குக்
காமேவுவானுலகமுடிகவிக்கச் சூர்க்காய்ந்தகந்தவேளார்
தூமேவுமயிலைவரைமான்மியத்தைத் தென்மொழியாற்புராணஞ்சொல்ல

சீர்வளருமுலகினுள்ளோர்தீநெறியிற்செல்லாதுசிவமென்றோதும்
பேர்வளரும்பொருளைப்புணர்ந்திடப் பரவுனர்வழிவாய்ப்பபொம்மையப்பேர்
ஊர்வளருஞ்சிவஞானபாலைய தேசிகர்தன்னுள்ளமுன்னி. [கொண்ட
தார்வளரப்புராணமதைப்பயிரங்கஞ்செய்திடநல்லோராலோர்ந்தே.*

உலகுபுகழ்வள்ளுவர்மன்றந்தை மகற்காற்றென்னவுரைக்குநீதிக்
கிலகுறுநற்சான்றாயிப்புதுவையுறை நிறைபொறையுமியலுமிக்க
நலமுறும்பொன்னறிஞனைக்கொண் டிருப்பலபிரதியினைநாடியாய்ந்தித்
தலமதனிலச்சியற்றியெவர்க்குமுபயோகமுறத்தழைக்கச்செய்தார்.*

.........................................

## புதுவை - தருமக்கல்விச்சங்கம் - சுப்பராயஉபாத்தியாயரவர்களியற்றிய
### ஆசிரியவிருத்தம்.

சீர்பெறும்விருத்தகிரிவளர்தூயன் தியாகராசப்பெயரறிஞன்
செப்பியமயிலைவரைப்புராணத்தைச்சிறக்கவசிற்பதித்துதவென்
றூர்பெறுமுயர்பொம்மையபாளையமார்ந்தக்குகல்லாடைநீறிவையே
யாபரணமபட்டுடைநறுஞ்சாந்தாயகத்திலோர்ந்தணிமடாதிபதி
தேர்பெறுமவீராகமக்கலைமார்க்கந் திகழ்சிவஞானபாலைய
தேசிகரதுலசிவமணங்கமழுந்திருமலர்வாய்திறந்தருளத்
தார்பெறுஞ்சேடன்குறுமுனியறிவு தமிழ்நிறைவிற்பனன்யார்க்குந்
தனதன்பொன்னறிஞனவ்வகையியற்றித்தந்தனன்றகையுறமாதோ

---

## சே - ப. கந்தசாமிஉபாத்தியாயர்சொல்லிய - ஆசிரியவிருத்தம்

மணியுலவுமயிலமலைக்கதைகுமரசங்கிதையில் வாய்ந்தகிரந்தத்ததையோர்ந்
மருவுமுதுகிரிவளர்மகேசன்முடிதவழ்கங்கைவமிசத்தில்வருசிரோட்டன [து
அணியுலவுதொன் ஞாலிலர்கியமொடாகமமறிந்த வற்புதசிலாக்யன்
அடியருக்கருள்பரசிவத்தையேபாடுவோனறிஞர்புகழும்பாக்கியஞ்
சு ணியுலவுதுமபகுருதிருவடியையேசதாசிந்தித்துபாசிப்பவன்
தியாகராசப்பெயர்க்கவிஞன்கிருபத்தியாச்செப்பியபுராணமத
பணியுலவுமாவையாசாமிவள்கேட்டிடப்பதிபுதுவைசாமிபொன்னுப்
பாவலக்குரிசிலன்புடனுய்ந்தளித்துலகு பரவுசீர்பெற்றனனரோ*

வேறு.

முருகர்புராணம் - தருமசிவமால்
திருஅச்சடுக்கிப் - பெருமையுற்றனனே*

சிறப்புப்பாயிரம் - முற்றிற்று.





உ

சிவமயம்.

# ஸ்ரீ மயூராசலபுராணம்.



## பாயிரம்

### காப்பு.

பூவிஞாதனன் பூவளந்தோனு மா
தேவிஞாதனற் றேவர்முனிவர ர்
மேவிஞாதம் விரும்புங்கரிமுக த்
தேவிஞாதச் சிலம்படியேத்துவா ம்.

### பரசிவம்.

அனைத்துலகுமனைத்துயிரு மவற்றினுணர்வாதியுமா யலவுமாகி
நினைத்திடற்கரிதாகி நிருமலஞானாநந்த நிறையுமோனர்
மனத்தினொளிர்பேரொளியாய் மலருமலர்மணமெனவே மருவிநின்று
மெனைத்துணையுமினைத்தனவென் றுணரவொணாப்பரம்பொருளை யேத்துவா
[மே.

### பராசத்தி.

பாலினுறுநீர்போல வாணவமாதியவகன்று பகருஞ்சுத்தஞ்
சாலுமறிவுருவாகுந் தனிப்பரனைக்கலந்தும்வயாத் தரித்தலின்றி
ஞாலமெலாமினிதீன்று காத்தழிக்குமாடறனை நடாத்தியைந்து
மே லமதாயுலகளிக்கும்பராபரையையெமதுளத்திற்கொண்டுவாழ்வா
[ம்.

### சபாநாயகர்.

வாயாந்தங்கடந்திலகு செஞ்சடிலமோடுழையு மழுவுமாடத்
தேனந்துமலர்க்கரத்தாற் றொழும்புலியும்பதஞ்சலியுந் தெரிசித்தாட
மீனந்தமிராங்கண்ணா லுமைநாடக்கனகமன்றில் விளங்கியென்று
மானந்தநடம்புரியு மொருபொருளினிருசரணை யகத்துள்வைப்பாம்.

### சிவகாமியம்மை.

மலைவல்லியம்பலவன் வாமவல்லியகிலாண்ட வல்லியென்றுந்
தலைவல்லிவேணுபுர மகற்களிக்கப்பால்பெருகுஞ் சாந்தந்தோய்ந்த
முலைவல்லியடியவரைக் கருக்குழியாழாதெடுத்து முத்திநல்கும்
கலைவல்லிசிவகாமவல்லிபதஞ்சொல்லினிலை கண்டுவாழ்வாம்.

# பாயிரம்.

## விநாயகர்.

பத்திவினாணசலமராப் படைத்தபரனருண்முன்னோன் பனைக்கைவன்கோட்
டத்திவினாசம்பெறவே யொருகோட்டாற்றடிந்துவள மமரர்க்கீந்து
முத்திவினாவியமுனிவர்க் கருள்புரிந்துமயிலைமலை முகட்டில்வாழுஞ்
சித்திவினாயகனடியை நித்தியநாந்தொழுதுபவஞ் சிதைத்தல்செய்வாம் (௫)

## விசுவேசர்.

பசுவேசற்பதியடங்கும் பாசமறிலெனப்பகர்ந்த பாலனுஞ்சித்
தசுவேசப்புங்கவனை யேயதற்குச்சான்றாகத் தன்பால்வைத்தோன்
முசுவேசிற்பொழிற்றவு மயிலைமலைவிசாலாட்சி முதல்விபாகன்
விசுவேசப்பெயரிலிங்கவடிவுடைப்பெம்மான்சரணம்விரும்பிவாழ்வா
[ம் *

## சுப்பிரமணியர்

முந்தனைமாராறுவர்முலை யருந்தியவாயினனிமய முளைத்தவல்லி
தந்தனையனறைகமழுங் கடம்பணியுந்தடம்புயனுஞ் சாமிநாதனை
வந்தனைசெய்பவருளத்தி னமுதமணிமயிலைமலை வாழும்வைவேற் [ம்.
கந்தனைநற்சிந்தையில்வைத்தெந்தமைவாதிக்கும்வினைகளைந்துவாழ்வா

பவமாதித்துயரகற்றி யடைந்தவர்க்கின்பருண் மயிலைப் பருப்பதத்தி
னவமாநற்குறக்கொடியைத்தெய்வானைப்பிடியைமண நயந்துதூய
தவமாமெய்க்கொண்டிலகும் பாலசித்தற்குயருளைத் தந்தனனோற்குச்
சிவஞானதேவனெனப் பெயரருள்சண்முகத்தேவன் றிருத்தாள்சேர்
[வாம்.

## தெய்வயானையம்மை.

கானமுறுங்கலைமகள்செங் கமலமகண்முதன்மகளிர் கருகிப்போற்று
ஞானமகட்கொருபாகர் தருதேகனெங்களைய னாளும்வாழ்த்து
மானமருமகள்சித்தன் மகளெனச்சொன்மாட்சிதரு மகனாற்கோட்டி
யானைமகளிந்திரனுக் கரியமகண்மருமலர்த்தாட் கன்புசெய்வாம். *(௬)

## வள்ளியம்மை.

புள்ளிமயில்வருபாக னிமயவரைமயிலுதவும் புதல்வன்சூரை
யள்ளியயிலெனவயிலுக் கருளினோ னாறுமுகத் தம்மான்வேண்டத்
தெள்ளியயிலெனவிடியைத் தந்தவனுசகுவகையருட் சிறப்பினாளை
வள்ளிமயிலைப்பணிந்து கள்ளமயலைத்தணந்து வாழ்குவாமே. *(௭)

## சரசுவதி.

தெள்ளோதப்பயக்கடலி னரவணையிற்றுயில்கூருந் திருமாலுந்தி
புள்ளோதொனுவுவகைமீக்கொளவந்தவன்வதனமொருநான்கிற்குங்
கள்ளோதிக் கயல்விழிச்செவ் வாயினொருமுகங்காட்டிக் காதலூட்டும்
வெள்ளோதிமத்தினைநம் முள்ளமெனுங்கமலமதின் மேவச்செயவாம்.

### திருநந்திதேவர்.

புந்தியானினைப்பரிதாந் திருக்கைலாயத்திறைவன் புனலார்வேணி
யந்திவான்மதியணியு மண்ணன்மலரடிபணிவா னெண்ணுந்தேவர் [சு
பந்திமணிமகுடநிரை விலகிடவேத்திரமென்னும் படைகொண்டோச்
நந்திதேவற்பணிந்து நந்தமதுவினைதொலைத்து நந்தாதுய்வாம். (௰௨)

### திருஞானசம்பந்தசுவாமிகள்

ஈழுதழுப்பவழுமகவு பாலருந்துமெனுமொழிக்குச்சான்றேயாகத் [ன்
தொழுதகுதந்தையைக்காணுதழுதரியபாசகத்திற்றொடக்குண்டன்பா
முழுமலமாயையைநீக்கு ஞானப்பாலுமையருள முன்னுந்தேக்குங்
கழுமலப்பேரூரின்வருமபிள்ளையடியுளளிவினைக் கரிசுதீர்ப்பாம்* (௰௩)

### திருநாவுக்கரசுசுவாமிகள்.

இப்பிறவிக்கடல்கடப்பா னெண்ணுமனத்தினர்யாரு மினிதாய்மாதர்
துபபுறுமாமயலுவரி காராழிநீற்றறையுந் துணுக்கென்றேறி
மைப்படுவிடோதனமுங் கடந்துமதமலைகடந்து வந்தவெங்க
ளப்பரிருபதங்கருதிற் செப்புவதென்னேயவர்கட் கண்ணுந்தானே.*

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

அத்தாவென்றொருயிரே யம்பொன்மலைவல்லிபங்கா வரனேயென்று
வித்தாரம் புகன்றுருகிப் பழிச்சுநருக்கருளபுரியும் விமலன்கேட்பப்
பித்தாவென்றருமபதிக மோதுதிருநாவலூர்ப் பெருமான்றாளை
யிததேகத்தியாநுதிக்க வெத்துணைதேகங்கடவ மியனறவமமா* (௰௫)

### மாணிக்கவாசகசுவாமிகள்

நாதவூர்விடைப்பாக நஞ்சணியுங்கண்டவனை நங்கைக்கோர்பால்
வீதவூராமூன்றினையும் பொடித்ததிருநகையாள விமலஞான
போதவூர்மதிசசடில வென்றிருகணீரவெள்ளம் பொழியவேத்தும்
வாதவூரடிகளடி முடிக்கணிந்துமிடிககுவிடை வழங்குவாமே.* (௰௬)

### அறுபத்துமூவர்.

உறுபற்றேதேனுமிலா வையனடியாரிடத்தி லுண்மைப்பற்றே [ச்
பெறுபத்தர்மனமுதன்மூன்றொருமையுறப்பூதிநற்சா தனங்கள்பேணி
சிறுபற்றுணவையகலத்துகைப்பற்றெலலாஞ்சிவமாய்த்தெளிந்துநின்று
வறுபததுமூவர்மல ரடிப்பற்றுலினிமறுபற றடாதுவாழ்வாம். (௰௭)

### சிவஞானபாலையசுவாமிகள்.

மாலயனுகியர்பரவுஞ் சிவகணத்தினதிபனுமை மகிழநனேவால்
வேலையுதித்தேமயிலை மலைமேவிகுமரனுடன் விழைபோராறறிச்
சாலவவனருடாங்கி யன்னவனேடினிதமர்ந்த தவத்தர்போற்றும்
பாலசித்தனுமெங்கள் சிவஞானதேசிகன்றாள பணிந்துவாழ்வாம் (௰௮)

### சிவப்பிரகாசசுவாமிகள்.

வெங்கையெனுந்திருத்தலத்தில் விழைவுறுசாமுண்டியிலம் விலகவேதம்
பொருகுழுதருகுன்றிடைமாங் கனிக்குமுனிந்தோன்வருந்தப் புகன்றவாதின்
மங்குடச்செந்தூர்ப்புலவ னருட்கவிசொல்வீரசைவ மணியாய்வந்த
வெங்கள்சிவப்பிரகாச னிணையடித்தாமரைவாச மெம்முள்வாசம். * (௰௯)

### வாழ்த்து

வேதமல்குக வேள்விவளர்குக *
சீதமாமுகி றிங்களின்மும்மழை
யோதநீருல கெங்குமொழுகுக *
யாக திருபனும் வாழ்கவே. * (௨௰)

### நூல் வழி.

கண்ணுதற்பிரான் களிகொளத்தோன்றிய கதிர்வே
லண்ணலாடல்க ளளப்பிலவவற்றினு ளறவோர்க்
கெண்ணுஞ்சூதன்முன் னிசைத்திடுமயில்வரைப் புகழை
நண்ணுமாசையாற் சிறியனுந்தென்சொலா னவில்வேன். (௨௧)

### அவை யடக்கம்.

நன்மைபடுதேயென்றாலு மன்மையதேயென்றாலு நற்றாயீன்ற [றொன்
தன்மகவைச்சீராட்டிப் பாராட்டுந்தன்மையைப்போற் றமிழ்வல்லோ
புன்கவியை நன்கவியென் றெடுத்தாள்வரெனவுளத்திற்பொங்குமன் பாற்
றென்மயிலைமலையில்வருங் குமரகுருதிருக்காதை செப்புவேனால் (௨௨)

பாயிரம் முற்றிற்று.





உ

சிவமயம்!

# மயூராசலபுராணம்.



## நைமிசாரண்யச்சிறப்பு.

சீதமேருகுடியிற்பொலிந்துறை திண்மையானுமியாவையு
மீதலாவிலைவேறுபேறெனவெய்தலானுமிருந்தவர்க்
கேதமுற்றுமகற்றியென்று மிருக்கையானுமுமைக்கிளங்
காதலன்பதமோதலாங்கர் காவிணைமிசமாவனம்.* (க)

வாதமேவபமாகநாடொறு மன்னிநிற்பவர்பல்கலை
வாதமார்கலியோதைநேர வழங்குவாருயர்விண்ணினும்
போதுவார்குளிகைக்குணங்கொடு புககபோர்நிலைபுக்கிட
வோதுவாரெனுமாதவத்தின ருய்யுமாறுகொணைமிசம்*(உ)

ஆலரசசோருசினை நாகமலிபூகம்வழை யத்தியிலவங்கமாரம்
பாலையெழுபாசிலை யுலாவுசரளங்கனி பலாமுகிலுலாவுதாழை
தாலமொடுகூதமகிழ் மாதவிபலாசுமிகு சம்பீரமாமலகமார்
வேலன்மகிழுவாலணியும் வெட்சியுயாகூவிளம்விராயவனநைமிசவனம்

கடங்கொளிபமானரி மடங்கலாமாகடமை காருருவமேதியநிகத்
திடங்கொளுழுவைகளுடல் ரோமநிரையார்கரடி சீறுதறுகட்சூகர
நடங்கொண்மயிலன்றிலுரகஞ்சரபமங்கவரி நாவிபகுவாயாளமோ
டடங்கலுநிறைந்துவயி ரங்கொள்பகையின்றியவ ணைபிணுறைநைமிச
[வனம்*

வேறு.

பரவுபெரியோரவையை யடையின்வெய்யதுற்சனருய் பண்புவாய்ந்த
வுரமுடையராயடங்கி நிற்பாதற்கடுப்பவிங்ங னுளாகருங்கானத்
தரவுகொடிதெனும்பெயரை யடைந்துமதன்றிறம்விளங்கா தந்தணாளர்
விரவுதிருமுடியின்மிசை யெழிற்பணத்திற்குடைநிழற்றும்வியப்பதோ
[ர்யால்*

## நைமிசாரண்யச்சிறப்பு.

நிலபிரிபாமலையருவி சொரிவதனைக்கண்டிரண்டு நீண்ட தந்த
நிலபிரியுமலைமாறு கொண்டெழுந்தாழுனிவர்குழா நெருங்குஞ்சாரற்
றலையெய்தாவுயர்பனைபோற் கரநீட்டிவானதியிற சலமுகந்தவ
வலைவில்புலமாதவர்தந் திருமுடிக்கணருவியென வாட்டலோபால்(சு)

வானட்டுமகவானுக் காயிரங்கண்டந்தமுனி மனைவிபாய
கானட்டுங்குழலகலி கைக்கலுருவந்தவிர்க்குங் கண்ணனுந்தி
மேனட்டுமலாப்புத்தே டருப்பையினற்பரிதிசெயது விடவந்தேகித்
தானட்டும்பெயரதுவே நைமிசமெனபதுவிங்ஙன் சாறறுங்காலை* (எ)

### புராணவரலாறு.

இனையவளஞ்செறிநைமி சாரணியந்தனிலறங்க ளிரண்டின்முன்னு
மனையறநல்லியல்பினெடு மாற்றியுயர் துறவறத்தின்வாயமைகொண்டே
தனைவின்மகம்பலவாற்றிப் பேறெய்திச்சிவாநுபவத் தாயோராகப்
புனையுமருந்தவம்பூண்ட சவுனகாதியர்மகிழ்ந்து பொற்பினோடே* (அ)

இருக்குமமைகியிற்பரமன் றிருவுருவகினைந்தழலி னிழுதுநோ [யன்
வுருக்கமுறமுளத்தினன்வெண் ணீறுருத்திராகககதா லொளிருமெய்
றருககமிடுசமயகலையாவையும்பொய்யெனக்கடிந்து சைவமெய்ம்மை
தெரிக்குமுரவோனறுமூன் றுயபுராணங்களெலாந் தெரிநதமேலோன்

வாதராயணற்குரிய மாணக்கன்சூதனெனு மாதவத்தோ
னைநராத்தொடெய்துதலு மாங்கமர்ந்தமுனிவரெதிர்ந் தன்பிற்போற்றித்
தீதறுநற்பகலாய தின்றெமக்குநினைக்காண்டல் செயலாலென்னு
மேதகுநன்முகமனிசைத் தவற்சூழ்ந்துதஞ்சாலை வியப்பிற்சோத்தார்*

தூயமணியாதனமொன்றமைத்ததன்மே லிருத்திநன்னூற்சொல்லுமா
நேயமொடுமருக்கியமா தியவுதவியுபசார நிரலேயாற்றி [றே
யாயிடைச்சூழ்தரவிருந்தி யாஞ்செய்மகப்பேறனைனை யையவெம்பா
லேயவிங்குதந்ததினித தவப்பயன்பெற்றேம்பிறப்பு மினிதிற்றென்றார்

### வேறு.

அம்மொழிசூதன்கேளா வாதியம்பரனைப்போற்றிச்
செம்மைசேர்மக்களாற்றித் திகழ்தருமுனிவீர்தூய
நும்முயர்குழாஞ்சேர்வன்றோ நுவலுறுமென்போல்வாருக்
கிம்மையிறறவங்கள்செய்திங் கெய்தரும்பெரும்பேறென்றான்* (௰உ)

ஆவதக்காலைநைமி சாரணியவறவோர் சொல்வா
ரோவருமறைகடந்த வொப்பிலாக் குரவற்கன்பே
மேவுறுமாணைக்காக்குண் மிகத்தெருள்சிறந்தோய் கந்தத்
தேவருங்கதைமுனசொற்றாய் கேட்டகஞ் சிறந்துளேமால்* (௰௩)

அத்திருக்குமரப்புத்தே ளமர்ந்தினி தாடல்செய்யு
முத்திசேர்தலங்களுள்ளு முந்துயர்தகைமைத்தாய
தெத்தலமதனைக்கேட்பா னிசைந்தனமாயவின்றெஞ்
சித்தநன்மகிழ்வுகூரச் செப்புதியறியவென்றார்* (௰௪)

என்றலுஞ்சூதன்கேளா வெரிபடுமிழுதேயென்னத்
துன்றுளமுருகிப்பொங்கத் தூய்தருமெய்சிலிர்ப்பக்
குன்றமுங்கடலுமாவுங் குலைந்திடத்தடிந்திலங்கு
வென்றிவேற்குமரன்பாத மென்மலர்பழிச்சிசொல்வான் (௰௫)

தலம்பலவுளவவற்றுட் சண்முகப்பரமனெய்தி
யலகில்பல்லாடல்செயதற் கமைந்ததாங்கடைந்தோர்க் கெல்லாஞ்
சொலுமறம்பொருளேயின்பந் தூயவீடருள்வதாகு
நலமுறுமயிலையோங்க றொண்டைநன் னாட்டின்மேவும் (௰௬)

வேறு.

அம்மலைமேற்சூர்தடிந்த வேற்கரசசெவ்வேள்குறமா னமரர்மானை
நன்மையுறவேட்டெதிர்ந்த சங்குகன்னற் சூர்மாற்றி ஞாலந்தன்னி
லிம்மையினிற்றனைப்பரவு மன்பரீங்கருதுவன வெளிதினீந்தே
செம்மையுறச்சித்தியொடுமுத்தியையுமருளவமர்ந்தான்றெரிதியென்றான்

சுகமுதவுஞ் சூதமுனி நகைமுகமா மொழிந்தருளுஞ் சொல்லைக்கேளா
வுகமுடிவுமழியாத நோன்பியறுமுனிவருள் ளுவகைமேற்கொண்
டகநெகிழவுறவன்புருவ மெய்தினரா யந்நாட்டி னணிகள்யாவும்
புகறியெனப்புகழ்ந்துரைப்பவதுகேட்டுச்சூதமுனி புகல்வான்மன்னோ.

முற்றிற்று.

ஆக விருத்தம் - ௪௰.





# மயூராசலபுராணம்.

## தொண்டை

## நாட்டுச்சிறப்பு,

குமிழ்தடிப்பப்பொருவிணைச்சே ரங்கிமலர்கமலமெனக் குலாமுகப்பொற்
சிமிழ்தடுத்தமுலைலோபா முத்திரையின்கணவன்விந்தச் செறுநீள்குன்றை
யமிழ்தலத்துளெனவழுத்தி னேன்பெறமாமறைப்பொருளை யருளியின்செந்
தமிழ்கொடுத்தவருட்குமரப் புலவனடிக்கமலமலர் தலைமேற்கொள்வாம்(க)

வேறு

திருமுகத்திலோரா றுபெற்றிலங்கியசெவ்வே
லொருமுகத்தினின் றுணைப்பருஞ்சித்தரெனுடன்ற
செருமுகத்தகன் றவற்கருள்புரிமயிறிகிரிக்
குருமுகத்தெழிற்பெறுதொண்டைநாடுகூறுவமால்(உ)

வேறு.

திருவளர்விசும்பிற்கொண்டலெம்பால சித்தர்கோனடியவர்க்கருள்வெ
டெருணிறங்கொடுபோயார்கலியயின் றுசெவ்வியவடியர்பாற்றீர்ந்த [ண்
மருளியன்மலமுமாயையுந்திரண்டுமயிலைமாமலையுறைகுமர
குருபரன்றன்பாற் குறைசொலவடையுங் கொள்கைபோன்மீண்டணவி
[ரைந்தே

அன்னகாரொழிலிமயிலைமாமலைமேலமரர்சேனுபதியுகைக்கு
நன்னிறமயில்போலீண்டிமற்றந்தநாயகனசுரனைத்தடிந்த
மின்னவிர்வேல்போற்றடித்தவன் றுவசவெங்குரற்போலதிர்ந்திடித்து
மன்னுமெய்யடியார்க் கவன்செய்நல்லருள்போல் வளங்கெழுமாமழை
[பொழிந்த*

மயிலைமாமலைமேன் மின்னுறீஇயிடித்து வான்கருமுகின்மழைபொழி
பயில்விசும்பமரர்க்கிறைவனுநகரியபாகசாதனனுளககனிவால் [தல்
வெயில்விரிமகுடகேயூரமௌலிர மேவியின்னியம்பலமுழங்க
வயிலெழிற்காதனுக்குழகற்குநறுநீராட்டுறுஞ்செயனிகராமால். (ரு)

ஈரநீர்க்கொண்மூமயிலைமாமலைமேலினியநீர்பொழிவனவெழின்மா
யூரமாய்க்குமரச்சேவகற்றுங்கியுறுதலைவேண்டிவன்மாவாஞ்
சூரனுமசுரன்கனிநதுவானதியிற றூநறுநீர்கொடுசெங்கை
வீரவேலவறகுள்ளுவகைமீக்கூரவிழைவினிலாட்டுவான்போலும்* (சு)

ஆறு.

மலையின்வீழ்புனலாங்காங்குறுமணியின் வகையுடன்செம்பொனுமலரு
மில தறுதளிரு நிரைநிரையாக வியற்றியெம்முருகவேட்கிணங்கத்
துலைவில்பன்மாலை தொடுத்தணிந்தனபோற்றுலங்குறவவ்வயினுலவிக்
குலவுறுமருவி யவ்வரையடியிற் கூடியாறுயினவம்மா* (எ)

சந்தனமகிலங் குங்குமந்தேக்கந் தருக்களைமுறித்துமென் காந்தட் [கும்
கொந்தலர்சிதறறிசசிறுகுடில்குலைத்துக் கொடிச்சிமென்மாதர்கள்காக்
பைந்தினைக்கொல்லையழித்துவன் குறவர்பாவையர்வெருவுகொண்டிரிய
கந்தடுமதத்தகளிறுபோங்கதியிற் போயதுகடம்புனனீத்தம்* [கு

வயமுறுசீயவாகனிதான்வாழ் வண்புலப்பாலையின்மருவு
மெயினராந்தானை யளப்பிலகொண்டே யெரிமுகத்துமிழ்தருகொடிய
வயினெடுங்கணைவாள்விற்கதையேந்தியடலுறுமகிடனைப்பொருதே
சயமபெறவிடுத்த தன்மைபோல்வரன்றிச் சலிலத்தின்பெருக்ககனறது
[வே*

முந்தொருதருவைக்கவர்ந்துபார்கொணர்ந்தான் முகுந்தனென்றவனுறையூர்
விந்திரன்படைவந்தடுதல்போற்றருக்களெண்ணிலகளைந்தெறிந்திடை [மே
தந்தனிக்குடில்செற்றணிகலந்துகில்கடயிர்முதலியகவர்ந்துழக்கி [யர்
வந்துமற்றவன்றனிலத்தினர்மகிழ மருதம்வந்தடைந்ததுநீத்தம். (ய)

வானுயர்தருவின் மலர்தளிர்கொண்டு மள்ளர்கள்பல்லியமுழக்கத்
தேன்கனிமுகந்துபதுமமுஞ்சங்குந்திகழ்தரக்கொண்டுவானவர்தங்
கோனைவார்முலைக்கோட் டியானைதந்தோனைக் குறுகியன்னேன்மகிழ்பூசைக்
கானநற்பொருளையமைத்தல்போன்மருத மடைந்தவணுலவியதன்றே (யக)

குன்றுறைமயில்கள்பிடிகள்வெம்பாலைக் குலவுறுபுறவுகண்முல்லை
யொன்றுசெம்மான்கள் மருதவெள்ளனங்களுடன்றழீஇவரும்புனல்கா
டென்றலரீக்குரவமுல்லையங்கமலஞ் சொனுமிவையாதியகூடித் [ந்த
தன்றனிக்கொழுநன்மணந்திடச்செலுநற்றலைவிபோனெய்தல்சார்ந்தது
[வே.

வானிழிபுனல்யாறணிதிகழ்குறிஞ்சிமருவெழிற்பாலைநன்முல்லை
கானலர்மருதநெய்தலின்பொருள்கள்கடலிடையடைதரச்சேர்த்தல்
ஞானமெய்ப்பாலசித்தனுங்குரவ னல்லடியாற்கருள்புரிந்தம்.
மானவர்தமைப்பேரின்பசாகரத்தின் மருவுறச்செய்தலேமானும்*(யஙு)

ஆவல்சேர்மனை யவனைத்திமாதர்சேர்வகற்றி
மேவல்செய்ளைநிரப்பியேகாக்கும்வீரனைப்போற்
றுவில்பூம்பயிர்களைகடிந்தினியநீர்தகைத்துக்
காவல்செய்குவர்மள்ளர்கள்சுகம்பெறல்கருதி (உக)

நாறுநீள்பயிர்சித்தர்கோனடியவர்ஞானங்
கூறுகேள்வி பின்பயன்கொளல்போற்பயன்கொண்டு
வேறுதெய்வங்கடொழாவவர்நிமிர்வின்மேனிவந்து
வீறத்தேசிகற்றொழுதல்போல்வணங்கினவிளைந்தே(உஉ

ஈரிரும்புகொண்டுழவர்நெல்லரிகளிர்பொழுதி
லாருமாம்பலும்வனசமுமறுப்புண்டுகிடத்தல்
கூருமன்புறுகொழுநர்மாண்டிடவருங்குறையாற்
சாருங்கற்பினர்தம்முயிர்துறத்தலேசாலும்(உ௩)

அரிகளாமெனை வுலவுறுமள்ளர்களணிநெல்
அரிகளாவனசும்மையிற்களஞ்செறித்தடுபோர்
புரியுமாறுபோலடித்துப்போர்புரிந்துபொன்னவர்தம்
புரியுமாமணித்தெனவதன்மீமிசைப்பொலிவார்(உச)

பெரும்பகட்டெழிற்புயத்தினர்நெல்லரிபெய்து
கரும்பகட்டினற்றுவைத்துவைநீத்தநெற்கால்போல்
வரும்பகட்டிரும்பண்டியிற்கொண்டுபோய்வானோர்
விழும்பகட்டினல்மனைதொறுங்குவித்துமேவினரால்

மஞ்சளாம்பயிர்காட்டுவவாழைகள்வாழை
மஞ்சளாவுயர்கமுகுகள்காட்டுவவளர்பூ
கஞ்சமானமாங்தெங்கினங்தெங்குநீர்க்கயத்திற்
கஞ்சமாமுகத்தரம்பையர்பதிபுறங்காட்டும் (உசு)

மருதமாநிலத்தெய்வதச்சந்தம்வந்த
மருதமாவெனவாடுறுமள்ளரை மகிழ்கா
மருதமாமனைக்கிழத்தியர்தொழுவிழாவயங்கும்
மருதமாபலாகாஞ்சியஞ்சோலைகள்மலர்ந்த* (உஎ)

ஆவல்சேர்மனை யவனைத்திமாதர்சேர்வகற்றி
மேவல்செய்வளைநிரப்பியேகாக்கும்வீரனைப்போற்
றுவில்பூம்பயிர்களைகடிந்தினியநீர்தகைத்துக்
காவல்செய்குவர்மள்ளர்கள்சுகம்பெறல்கருதி (உக)

நாறுநீள்பயிர்சித்தர்கோனடியவர்ஞானங்
கூறுகேள்வி பின்பயன்கொளல்போற்பயன்கொண்டு
வேறுதெய்வங்கடொழாவவர்நிமிர்வின்மேனிவந்து
வீறத்தேசிகற்றொழுதல்போல்வணங்கினவிளைந்தே(உஉ

ஈரிரும்புகொண்டுழவர்நெல்லரிகளிர்பொழுதி
லாருமாம்பலும்வனசமுமறுப்புண்டுகிடத்தல்
கூருமன்புறுகொழுநர்மாண்டிடவருங்குறையாற்
சாருங்கற்பினேர்தம்முயிர்துறத்தலேசாலும்(உங)

அரிகளாமெனை வுலவுறுமள்ளர்களணிநெல்
அரிகளாவனசும்மையிற்களஞ்செறித்தடுபோர்
புரியுமாறுபோலடித்துப்போர்புரிந்துபொன்னவர்தம்
புரியுமாமணித்தெனவதன்மீமிசைப்பொலிவார்(உச)

பெரும்பகட்டெழிற்புயத்தினர்நெல்லரிபெய்து
கரும்பகட்டினுற்றுவைத்துவைநீத்தநெற்கால்போல்
வரும்பகட்டிரும்பண்டியிற்கொண்டுபோய்வாஞேர்
விரும்பகட்டினல்மனைதொறுங்குவித்துமேவினரால்

மஞ்சளாம்பயிர்காட்டுவவாழைகள்வாழை
மஞ்சளாவுயர்கமுகுகள்காட்டுவவளர்பூ
கஞ்சமானமாங்கெதங்கினங்தெங்குநீர்க்கயத்திற்
கஞ்சமாமுகத்தரம்பையர்பதிபுறங்காட்டும் (உசு)

மருதமாநிலத்தெய்வதச்சந்தம்வந்த
மருதமாவெனவாடுறுமள்ளரைமகிழ்கா
மருதமாமனைக்கிழத்தியர்தொழுவிழாவயங்கும்
மருதமாபலாகாஞ்சியஞ்சோலைகள்மலர்ந்த (உள)

இரும்பினன்னகோட்டெருமைகளியானை கட்குரித்தாங்
கரும்பையார்தருபடப்பைபோய்க்குதட்டியேகமழ்பொன்
னரும்புகற்பகஞ்சேர்தருகாசமுமருந்தும்
விரும்புதேவர்கொளமுதெனச்சொலுமொழிவிளக்கும்

நன்னறும்புனற்றடங்களிற்கமல்நாண்மலர்மேன்
பொன்னிறச்சிறகன்னங்கடிருவெனப்பொலியுந்
துன்னுபூம்பொழிற்றுறுமயிற்றோகையைவிரித்து
மின்னுகாஞ்சிபூண்சயமகளெனநடமேவும்* (௨௯)

சோலைமென்மலர்த்தேறலுங்கன்னலைத்துளைக்கு
மாலைவாய்வருந்தேறலுங்கனியினின்றமைந்து
நாலுந்தேறலுநற்பழனப்பயிர்வளர்த்தே
வேலைவாய்நிறைத்தங்குளமீன்விருந்தாற்றும் (௩௰)

தாமரைத்திகழ்முத்தமுஞ்சங்கினொண்முத்துங்
காமருங்கழைமுத்தமுமயிலனார்கடிந்த
தாமமுத்தமுமிரவிருள்சார்ந்திடாவண்ணஞ்
சேமவொண்மதியெனத்திகழ்தெங்கணுஞ்செறியும்

குறிஞ்சி. - வேறு.

பருமயிலிவர்ந்து கிரியுடனசுரைப் பரிதிமுன்பனியெனத்தடிந்த
முருகவேளரசு புரிவதற்கிடமாய் மொழியுமன்னவன்படைவீட்டு
ளொருபடைவீடா யுமையவடாதைக் கொத்திடுஞ் சுற்றமாயொளிரும்
பெருமையிற்சிறக்கு மலையமர்குறிஞ்சிப் பெற்றிமையெற்றெனவிசைப்
[பாம்*

தேக்ககிலாரங்குறிஞ்சியங்கசன்றன் செழுமலர்க்கணைகளிலொன்றை
யாக்குறுமசோகநாகமொண்காந்த ளடாந்துவானளவியேமலரு
மூக்கமேயுயருங்கானவரதனு டுலவியேகொலைத்திறம்புரியு
மாக்குலந்தடிந்துசீயத்தையெதிர்ந்துமானுடச்சீயத்தின்மலைவார் (௩௩)

கவையுறுகிளைகொள் சந்தனமுதலாங் கான்மலர்த்தருவெறிகுநரு
முவையறுபுலங்களுழுநருமாங்க ணொளிர்தருபன்மணிகிளைந்து
குவையுறுத்துநருமேனலைவனமுற் சொளும்பயன்விளைதகள்வித்துநரு
நவையறுதேறனீர்நிரப்புநரு நாடொறுங்களிப்பினிற்றிகழ்வார்.* (௩௪)

ஏனலங்காவற்கொடிச்சியர்தங்க ளிசைமொழியெழில்விழிக்கிகலே
யானபூங்குயிலஞ்சுகமயில்வாவு மரியமானிவற்றினைக்கவணில் [வார்
வானவிருடுசக ளுதிர்ந்தெனவொளிகொண் மணிக்கலின் வீசியார்த்தடர்
மேனவிபகைவரடர்வரேல்வாளா விடுவரோவியனிலங்காப்போர் (௩௫)

ஒன்றுமாடியினிற்றேன்றுதம்முருவோடுமைப்பதுபோற்றமீதொலிகொ
குன்றெதிர்கூவுமகொடிச்சியர்நறுநீர்க்குறுஞ்சுனையாடிமென்மலர்க [ள்
முன்றறற்கருமென் கூந்தலிற்சூடிச் சுவைகொள்யாழ்செவ்வழிபயின்று
மன்றலமம்பொழிலினடமிடுகலப மாமயிலெனவுலவுவரால் (௩௬)

செறிகுரலேனலறுத்ததனிடியுஞ் செழுங்கிழங்கவியுஞ்சேரீக்க [ப்பி
ளொறிபடைத்தேனுங் கனிகளுநிறைத்தேயின்னிசைசத்தொண்டகமெழு
வெறிகொளாட்டயர்ந்துநெட்டிலைக்கதிர்கொள் வேற்கரத்தெய்வதப்பர
குறிபுகன்றிலகுவேன்மகற்பழிச்சுங்குன்றவரொலிகடல்கொளுமால் [விக்

பாலை. - வேறு.

அன்பொடுவெறியாட்டி னன்னவர்நடமாட
வின்பமெலாமுதவுமெழின்மலைநிலமருகாந்
துன்புறுபாலைவளஞ்சொல்லநினைத்திடிலே
யென்பும்வெதும்புமெனிலெங்ஙனமோதுவதே *

கன்னியெனும்பெயரிற்கருதுபொருட்கிதமா
றென்னவுணர்ந்துவிறற்றேவர்களிழிவெய்த
முன்னடன்மகிடனுரம்பொடியமுடித்தரியூர்
மன்னருள்சயமகடன்விழவுமலிந்திடுமால் * (௩௯)

கற்பொலிதிண்புயவெங்காளையர்களுமவர்கை
விற்பொலிநுதலெயினமெல்லியர்களும்விரவி
பொற்புமலர்க்குரவும்புனைதருபன்மலர்தூ
யற்பொடுபூசைபுரிந்தந்தரியைப்பணிவார் * (௪௰)

கொலைபுரிதருகோபங் குலவுகுறும்பர்களு
மலகில்வறுங்குழியுமறலறுமாழ்கிணறு
முலைவில்குராமரமுமோமையுழிஞ்சில்களு
மிலகுமிருப்பைகளுமிசைவுறுமெங்கணுமே (௪௧)

பகையுறு துடியொலியும்பாலையின்யாழின்வருந்
தொகைபெறுபஞ்சுரமுந்தொலைவறுவெஞ்சமமும்
பகலிடைவருசூறைப் பவனமுமுகண்முயலுந்
தகுமியலறுகள்ளித்தருவுமலைந்திடுமே* (௬௨)

இலகுறுவெம்பாலை யெழிறிருமாலயில்பா
ருலகொடுபோயவனுள் ளுடலைவெதுப்பியதா
னிலவுமுடற்கருகி நெய்த்தியுண்டுமழல்
குலைவிலதாதலினாற்குளிர்கடல்புக்கனனல் (௬௩)

வெய்யதுவையமதின் விள்ளவதற்குநிக
ரொய்துவதொன்றுமிலை யின்பமுடன்பழகி
யையமிலாதுகுறிப் பறிகுநரொருவர்தமைக்
கையகல்வுற்றவர்தந் நெஞ்சுகடுத்திடுமால்* (௬௪)

முல்லை. * வேறு.

இன்னபாலை யிசைத்தனமீதன்றி
யன்னவூர்தியையம்புயத்துங்கியின்
முன்னமீன்ற முகுந்தனினிதமர்
துன்னுபூம்பொழின்முல்லையைச்சொல்லுவாம்

கொன்றைபூவை குருந்தம்பிடவநன்
மன்றற்பூம்பொழில் வானமளாவுத
லன்றோர்காவை யரிகவர்வெம்பகை
சென்றிடற்கங்கு சேர்தனிகர்க்குமால் (௬௬)

முல்லைவேய்ங்குழ லூதிமுன்னையர்தம்
மெல்லியார்தமை மேவியமாயனை
சொல்லியாங்கவர் தோகையரின்பமா
மல்லன்மேவும் விழவின்வணங்குவார் (௬௭)

சேவினங்க டழுவித்திருநடைப்
பாவையார்தழு வப்பயில்கோவல
ராவினக்குழற் பண்ணிலழைப்பரக்
காவிமெய்ம்மலர்க் கண்ணணிகர்ப்பவே (௬௮)

சாமையும்பன் முதிரையுஞ்சால்புடைத்
தேமலிந்த விளைவுகள்செயகுவார்
தாமமென்குழ லாரைத்தழுவியே
காமர்சோலை மருவுவர்காதலார்*(சக)

முதிரைமேய்வன சேவல்கள்மொய்யொலி
வெதிரினுயர் விளக்குமிசையொலி
யதிருமுன்கை வளையொலியாய்ச்சியர்
ததிமதிப்பொலி யோடுந்தழைக்குமே* (ருய)

வேறு.

பூவைமேனிவந்தோங்கியே பொலியும்விண்மதியைத்
தாவிவெண்ணெயை யுறியிடைக்கவாநிடத்தாவுந
தேவையொப்பன வன்னவற்குருடரச்சிவனா
மேவிநிற்பன வொத்தனகொன்றையாம்விருக்கம்* (ருக)

குருந்தினற்சினை மேவுகாயாவெழிற்கோலம்
மருந்தடுத்தமென் மொழியுளவிடைச்சியர்வளைந்த
வருந்துகிற்கரங் கொடுகிளைதனையணைத்தேறுந்
திருந்துமாயனை யொத்திடத்திகழ்ந்ததுமுலலை* (ருஉ)

கானயாற்றிடை யாடுபுகழுமியகுரவை
யானவின்னிசைப் பண்களாற்பாடுமாய்ச்சியர்கள்
பானலம்பெறு மின்சொலாற்பாறயிர்பகரு
மேன்மையேதழைத் தோங்குபுவிளங்குமான்முல்லை* (ருங)

நெய்தல். வேறு.

மைதவழ்திரையார் கலியினொர்கலியும் வால்வளைகுமுறிசைதொனியும்
பொயதிகழ்மருங்குற்பரத்தியர்புலம்பர்வருணனைப்போற்றுறும்விழவி
னெய்துறும்விளரிச் செவ்வழிப்பண்ணு மினியவாக்குமுழுமித்தகையா
னெய்தலின்வளங்களளப்பிலவவற்றினிலைமையைநிகழ்த்துவதெவனே*

கடற்கருகுயர்பூம்புன்னைநீண்ஞாழற் கான்மலர்நீழலிற்சுறவி
னடற்பருமென்மைபனாட்டுபுநெய்தலலரைமென்புன்னையக்கைதை
மடற்கமழ்மலரையணிந்துமீனடிசில் வைத்திடவருணனுங்கமையத்
தொடற்கிசையாழ்செவ்வழியிசைத்தளவர் தொழவருள்வளநனிதொகு
[மால்*

கண்டகக்கைதைப்பொதும்பருறாழற் கானமும்புன்னையங்காடுங்
கண்டலம்புதருமுண்டகத்திரளுங் கலந்துறுவளஞ்செறிநெய்த
றிண்டிறலளவர்வலைகொடுவீசிச் சிக்குமீன்குழுவினைக்கனாயிற்
கொண்டுவந்துகுப்புவளத்தியருணக்குங் கொள்கையிற் புட்களோச்சுவ
[ரால்*

கயலினைக்கவரவருபறவைகள்பூங் கடிதடநுளைச்சியர்கண்ணைப்
பயமுறுமிருபத்திரமெனவெருவிப்படல்வருமுபத்திரமென்று
நயமுறுமுடலைப்பத்திரநாடி நற்சிறைப்பத்திரம்விதிர்த்துப்
பயின்மயிலனையார்காமொடோதுறவும் பறப்பனநெய்தலம்பாக்கம்* (௫௭)

விளரியாழ்வருடிச்செவ்வழிப்பண்ணை விளம்பிடுமுழக்கமுழுப்பை
யளவர்களாக்குமொலியுநன்றெவா யதிர்குரற்கோட்பறையாப்பும்
தெளிதருமுவர்நீர்க்கேணியிறபரதர் சேயிழையவர்குடைகலிப்பு
மொலியிநித்தாளங்குளிப்பவர்தெழிப்புமுறுகடற்றுழனியினொலிக்கும்

தூங்கவின்றமிழ்ச்சாகரப்பலதுறைநூற்சொற்பொருளுளநிறைத்தியற்றுந்
தங்கணூல்செறிக்கும்புலவர்போற்பொருள்கடண்கடற்றுறைதொறுநிறைத்
வங்கம்வந்துரியதுறைபிணிற்சொரிந்தும் வைகுதலின்றியேயுலவு [து
மிங்கவாப்பொருளையீட்டுநர்வாளா விருப்பரோவிரவுமெல்லியுமே* (௫௯)

திணைமயக்கம். வேறு.

பழுத்தநீள்சினைப் பலவுபோய்வேங்கையிற்படரத்
தழைத்தவேடுவச் சிறுமகாரதன்கனிதடிவ
ரிழைந்தநீங்கினைப் பொறுமினென்றதன்விலைப்பொன்னீ
விழுப்பமாகநற் கணிமலர்த்தூவிடும்விருப்பால்* (௬௰)

ஐவனங்களுந் தோரையுமேனலுமணியா
ரையநுண்ணிடைக் கொடிச்சியராளந்திடவளவத்
தையலார்களொண் டாளநறபவளந்தந்திடவே
யுய்யுமாறுகொண்டன்னவரிடங்களிலுய்ப்பார்* (௬௧)

சோகஞ்செய்யும சோகப்பூவரன்மிசைதொடுத்த
வேகவேள்கணைபோன்மெனக்கொன்றைமேல்வீழ்ந்தவ்
வேகனற்கணை யெரிந்தபோற்கரிந்துகீழ்விழுந்த
தூகியாவதை நகைப்பதையொக்குமென்முல்லை* (௬௨)

கமுகிளங்கதிர் முத்தமுங்கடலலையொதுக்கு
மும்மிழ்சுடர்ட்பொலி முத்தமுஞ்சேர்வுழியுறையு
மமதைமீக்கொளுங் கம்புளக்கழியிடைவாவி
கிமிர்சுறுவினைக் கொத்துமால்சமயநேர்தரவே (சுங)

தடத்தினின்றெழும் வாளையங்கமுகினைச்சாடிக்
கடத்திற்கானயாற் றிடைக்குதித்துழக்கவக்கான்யாற்
றிடத்தினின்றுக ளிளவராலிருமலைச்சுனைவீழ்ந்
தடுத்தமீனின மனைத்தையுங்கலக்கியதம்மா (சுச)

வேறு.

வேங்கையின்னிழன் மேதியுறங்குவ
தேங்குசோலையிற் சேர்ந்திடும்வேங்கைக
ளீங்குநானிலத் தின்னிடஞ்சற்றுப்பெற்
றோங்குறுங்குறும் பொத்தனபாலையே (சுரு)

இன்னவைந்திணை யின்வளமெய்தியே
மன்னுமித்தொண்டை நாட்டிற்குவானவர்க்
கன்னங்கிட்டுறு வந்தரமாகிய
பொன்னினாட்டைப்பொருவென்ல ;மோ

நீதி.

வானமல்குவ மான்மதனைம்மலர்க்
கானமல்குவ கண்ணியமோங்குநற்
றானமல்குவ சார்வரும்வீடருண்
ஞானமல்குவ நாளுமந்நாட்டினே (சுஎ)

ஏட்டினுள்ளன வெண்ணத்தினுள்ளன
வீட்டினுள்ளன வேதத்தினுள்ளன
காட்டினுள்ளன கண்ணனவித்தொண்டை
நாட்டினுள்ளன நாடருநீதியே (சுஅ)

காலையாதிசற் கன்மப்பயிற்சியே
மாலையாதிமென் மாதர்முயக்கமே
சாலையாவுநற் றன்மமுயற்சியே
மேலவானினு மிக்கவிந்நாட்டினே (சுகூ)

வள்ளிதழ்ச்செம் மலரிற்றடங்களிற்
கள்ளமல்லது கள்ளமற்றில்லிதழ்
விள்ளுமெலாவனன் மெல்லியர்நுண்ணிடை
கொள்ளலாகுங் கொடியனநாடெலாம்*(எ௰)

தலமெலாம்புகழ் சாற்றுமந்நாட்டிற்பா
சிலைகுலாந்தரு வேய்ந்தகொடித்திர
ளலகிலாப்புத லன்னவைகாய்கனிக்
குலையதன்றிக் குலைபிறிதில்லையே* (எக)

வேறு.

நிழலுலாம்பொழி லுத்தொண்டைநாட்டினிற்றெய்வ
விழவியக்கலி மென்மலர்க்கோதைமெல் லியலார்
மழவிடைக்குநேர் குமரர்கண்மணத்தினுக்கியம்பு
முழவியக்கலியல்லதே லாக்கலிமொழியின்* (எஉ)

ஒக்கமில்புக ழத்தொண்டைநாட்டினல்லெழிலார்
முழுகுகுபூண்முலைக் கலவையின்சேற்றினமும்மதத்த
பழுக்குலைபபனைக் கைச்கரிமறுகிடைப்பயின்ற
வழுக்கலின்றிச்சொல் வழுக்கலின்றுகுமாக்கட்கே* (எங)

வேறு.

திருவளர்தொண்டையென்னத் திகழ்ந்திடுநாட்டின்சீரை
யொருவிதமுரைத்தகூத ஞெளிவிடுமயில்வேலேந்திக்
கரிமகளவள்ளியென்னுங் கன்னியருடனேயெங்கண்
முருகன்வாழ்மயிலைக்குனற முதூநகரறைதலுற்றூன்* (எச)

நாட்டுச்சிறப்பு முற்றிற்று.

ஆ விருத்தம் - ௱௰௪.



# மயூராசலபுராணம்.

## மயிலைமலை.

## நகரச்சிறப்பு,



முருகெலாமொரு வடிவெனத்திரண்டெழு முருகனைக்கிளிமயில்க
ளருகெலாஞ்செறிந் திளந்தினையருந்திடு மடுக்கலின்மாவொடுதேன்
பருகலாமெனப் பரிந்திடுமரிவையின் பதமலர்பணிவானை
யுருகலாமுளத் தொடும்பணிந்தவர்பதத் துய்யலாம்பவந்தீர்ந்தே* (க)

நாடெலாம்புகழ்தொண்டைநாடெனச்சொலுநன்மகட்கொருமுகம்போ
லீடிலாதநல் லழகுபெற்றிலங்கிவே ளிருமடமாதரையுந்
தேடலாம்படி யுறுமயின்மலைகொளுந் திருநகர்ப்பெருமையையாம்
பாடலாம்படி துணிந்தனமவனிரு பதமலர்முடிமிலைந்தே (உ)

### மதில். * வேறு.

அளவுகொண்டகன்றபுவியையுள்ளடக்கியுடற்படையுயர்பொறியமைந் [து
வளமொடுநாலிரெழுகலாலுயர்ந்து மணியொளிதிகழ்தலாற்பகையை
தளைபடுப்பதனாற் பல்படைபயிலுந்தன்மையாற்சூக்குமத்தகையாற் [த்
கலைகளுமரசர் நிகர்க்குமான்மயிலைக் கன்னகர்சூழ்திருமதிலே * (ங)

உயர்வினான்மாலாய் முகங்கணான்கதனா லோதிமத்தலைவனையுன்னும்
வயங்கொள்வெள்வடிவான் மதிதவழ்தலினான்மாதொருபாகனாய்வானிற்
புயலினமூருந்தகையிலிந்திரனாய்ப் பொன்னகர்கடந்துகோளகைபோய்
மயன்முதலியபே ரியாவருமயங்க வதிருவதந்நகர்மதிலே* (ச)

### அகழி.

அம்மதிற்புறஞ்சூழ்ந் தகலிரும்புவியி னாழமதளந்தறிந்திடவுஞ்
செம்மணிச்சுடிகைச் சேடனிம்மயிலைத் திருநகருறைதருமாந்தர்
தம்மையொப்பவனோவல்லனோகல்விதந்தகைமையாலெனமதித்திடவும்
பொம்மலோடேகுந் தன்மையினாழ்ந்து பொருவறவிளங்கினதகழி*(ரு)

நீநிடாரைந்தக் கரத்தையுச்சரியார் கிமலனைப்பணிந்திடார்பவநீத்
தேறினும்வீழ்ந்தோரேநிடாவகையாழ்ந்தெழிற்சிறையனக்குழாம்வளை
கூறுமீன்குலங்க ளிடங்கர்நீர்முடுவெல்குரண்டமின்னனபகுழுமி [கள்
நாறுமாமலர்க ளளப்பிலமலர்ந்து நறைதரவிளங்குமக்கிடங்கே* (சு)

வீதி * வேறு.

வாகையுற்றிடு மறைபயின்மடமூர்பர்தந்து
பாகமார்மடம் புராணமாகமம்பகர்மடமே
மாகநச்சிய பதிகநல்லிசைவளர்மடமி
யோகர்ஞானிக ளுறைகின்றமடம்பலவுளவால் (எ)

ஆதிசைவரா மந்தணர்வீதியுமலரோன்
றீதிலாமுகம் வருமறைவேதியர்தெருவு
நீதியாயுல காடருநிருபர்தம்மறுகு
மேதமற்றநற் பொருளபெறும்வணிகர்தம்மிருப்பும்*

அடுத்துளோர்நிரப் படுத்திடாவகையருநிதியங்
கொடுத்தலன்றியெவ்வுயிர்கட்கும்பசிகொடாராகி
விடுத்திடாப்புகழ் மேவுவேளாளருமவர்பா
லுடுத்தவேவனிமாந்தருமுறைதெருக்களுமொளிரும்

வேறு.

தெள்ளுசாந்திற் றிகழ்மணிமாடங்கள்
வள்ளியானையை மைந்தண் மணப்பதை
யுள்ளியீசன் வரப்பலுருக்கொடு
வெள்ளிமால்வரை வந்தெனமேவுமால்* (௯)

மாடமேவு மணிகொடிபத்தியிற்
கூடிவானிற குலவுதல்வான்மக
ளுடியாதவற் காநந்தகண்ணுற
நீடுசாமரை யாட்டணிகர்க்குமால்* (௰க)

வென்றிப்போரின் விளங்கரியேறனார்
துன்றுபூந்தழற் றேகைநல்லாரைநண்
மன்றலன்பின் மருவுறுமாடங்கண்
முன்றிற்றேறு முரசமுழங்குமால்* (௰உ)

துகிலினார்கொடி தோன்றியமாடமே
லகிலின்றாம மளாவியநாப்பணி
னகில்சுமந்த நகைமுகவலலியர்
முகிலினாடொளிர்மின்னெனமொய்ப்பரால்* (௰௩)

மாடமாளிகை மீதுமடநலா
ராடுகின்ற சிலம்பொலியண்டரூர்
கூடியங்கு நடித்திடுங்கோதையர்
வாடிநிற்க மயக்கம்விளைக்குமால் (௰௪)

மயிலியற்றிரு மாதர்மதனனார்
செயிரின்மேனிலத் திற்செய்கலவிகள்
பயிலுங்காலைப் பரிந்துகளைந்தெறி
வெயின்மணிப்பணி மின்னெனவீழுமே* (௰௫)

சந்தனந்திமி ருந்தடமார்பிடை
முந்தனங்கன் விடுங்கணைமோதிட
வந்தனங்களின வேழிதாற்றவாடவர்
வந்தனங்கள் புரிவரின்மாதரா* (௰௬)

தத்தைநாயகர் பேசுசையோகவா
தத்தையோதவுந் தையலர்கேட்டொளிர்
முத்தையொப்ப முறுவல்புரிந்துவாய்
முத்தையீய முகத்திலணைப்பரால்!* (௰௭)

கோட்டுவாரணக் கொங்கையுமோரிரு
கோட்டுவாரண மும்மதங்கொள்வன
கோட்டுவாரணக் கோமதனார்தநுக்
கோட்டுவாரணங் கூவுமளவுமே* (௰௮)

வேறு.

கருலாவுபொற் கந்தவெற்போடுநற்கனக
மேருவாதிய வந்தறுமுகப்பிரான்மேவி
யாருமித்தலத் தமர்தல்போற்பொன்மணியமைந்த
தேருயர்ந்துநீள் கோடகஞ்செறிவனதிகழ்ந்தே* (௰௯)

ஐங்கரத்தனெம் முருவினிற்சிறிதுபெற்றன்றே
தூங்கமுழவுல குந்தொழத்துலங்கினனென்று
லெங்கண்மேன்மையை யிசைக்குந ருளர்கொலோவென்றுந்
தங்குமால்களி றளப்பிலதருக்கொடுவயங்கும்* (உ௰)

அரியரீமுதற் பல்வகைப்பிறவியினொழ்ந்தும்
பெருமையின்றென வெம்முருவெடுத்தபின்பிறவான்
றெரியினியாங்களே யுயர்வெனநிமிர்ந்துதிண்டிறல்சேர்
பரியினந்தெரு விடையிறுமாப்பொடும்பயில்வ* (உக)

கடைவீதி.

மணிபொன்பீதவத் திரம்வளையாழிமல்குதலாற்
பணிபணம்பொருந் துதலினற்படியளப்பதரு
லணிகொணீட்சியா லிசையினொலியாரும்வந்துறலாற்
கணிகொளாவணஞ் செந்திருமாலெனக்கவினும்* (உஉ)

சந்தனத்தைமென் கலவையின்சாந்தினைக்கொண்டு
வந்தனத்தைநேர் நடையினர்பகர்ந்திடவைப்பக்
கந்தனத்தைநேர் மெல்லியர்வாங்கித்தங்கணவர்
தந்தனத்தைநா டாதுமேற்பூசுவர்தழைப்ப* (உங)

நகையைநாசியைக் கண்களைவாயைநன்முலையைப்
பகைசெய்முல்லைசண் பகநெய்தலாம்பல்பங்கயத்தின்
றொகையைக்கைப்பிடி யாக் ட்டித்தூக்கினர்பகரச்
சிகைமெனகாட்டினிற் கொண்டுபோயிடுவர்வாழ்செல்வர்* (உச)

மனம்பொருந்தினும் வாலிபம்பொருந்தினுமதிக்குங்
கனம்பொருந்தினுங் கல்வியைப்பொருந்தினுங்கருதார்
தனம்பொருந்தினர் தருதனம்பொருந்துறத்தகுவார்
வனம்பொருந்துறுங் கணிகையருறைதெரு வயங்கும் (உரு)

அற்பினோடுவந் தரசருமிருந்தியளித்தெம்
நற்பதம்பணிந் திடச்சுகமருளுவநாடிற்
கற்புமாதருக் கெவன்சிறப்பியாங்களேகடவுட்
பொற்புமாதொன் றுலவுவாபொதுமடவியரே। (உசு)

நீதி. * வேறு.

பாலனங்கம் பருத்திடத்தாயரன்
பாலனங்கள் பரிந்தினிதூட்டுவார்
பாலனஞ்செயும் பண்புறுநந்தகோ
பாலனம்மருகன்பணிசெய்யினே* (௨௭)

ஆரணங்களை யந்தணரோதுவார்
ஆரணங்கன ரன்னம்வழங்குவார்
ஆரணங்கு சடையவனீறணி
ஆரணங்குறு வாரொன்றறைவரோ* (௨௮)

வேறு.

பேறெனப்பெறும் பொருளெலாம்பெற்றிமையாக
வீறியேயிருக் கின்றனநம்பரன்விரும்பு
நீறிலாததோர் முகமுமஞ்சி ரலனைறெழுத்தைக்
கூறிடாததோர் வாயுமங்கிலலையால்குறிக்கின்* (௨௯)

கல்வியாலுய ரனந்தனைக்கீழுறக்கண்டா
ரொல்லுமெய்யுரு வான்மதனுருவினையொழித்தார்
செல்வமேனமையாற் றனதனைக்குருடனுச்செய்தார்
மலலனமேவுசீர் மயிலையங்கிரிநகர்மாந்தா* (௩௦)

தந்தைதாய்மொழி தவறிடாத்தகைமையும்பெரியோர்
வந்துநாடிடும் பொருள்பலவழங்கிடுமனமுந்
தநதநாயகர்த் தேவெனமகிழ்விரதமுமே
சொந்தமாய்மதித் திருப்பர்வாழ்கற்பகத்தூயோர்* *(௩௧)*

அறத்தினன்னெறி யில்லறமாற்றுவதறமே
புறத்தினன்னெறி போயுறும்பொருளெவனென்று
வுறுத்திடும்படி மேலவரோதியமறுதான்
மறுத்திடாதவர் வாழ்க்கையேவிளங்குமந்நகரில்* *(௩௨)*

தவமுஞானமு மெய்ம்மையும்பொறுமையுந்தயையுஞ்
சிவன்பதாம்புயந் திகழ்தருஞ்சிந்தையுஞ்சிறப்ப
வவமெனப்படு மவற்றையும்பரிகரித்தமர்வா
ருவுமையன்னவர்க் கெவரையாமுனைத்திடுவோமால்* (௩௩)

வேறு.

பூகமாமரங்களெங்கும் போர்மதன்சரங்களெங்கும்
யாகசாலைகளேயெங்கும் யவனலீலைகளேயெங்கும்
யோகியர்வாசமெங்கு முத்தமாநேசமெங்குங்
கோகிலத்தொனியேயெங்குங் கொத்தெழிற்கனியேயெங்கும்* (௩௪)*

மறையவர்நடையேயெங்கும் வள்ளியோர்கொடையேயெங்குங்
கறையறுமதியேயெங்குங் கணக்கறுநிதியேயெங்கு
நிறைபுனற்றடமேயெங்கு நிலவணமடமேயெங்கு
மறைதமிழ்ப்பண்ணேயெங்கு மருள்பெறுகண்ணேயெங்கும் * (௩௫)*

வாரணமாவேயெங்கு மணமுறுகாவேயெங்குந்
தோரணநிரையேயெங்குந் தூயவருரையேயெங்குந்
தாரணவொளியேயெங்குஞ் சகலர்க்குமளியேயெங்கும்
பூரணமனதேயெங்கும் புலவர்கடனதேயெங்கும்* (௩௬)

அடியவருருவேயெங்கு மாறெழுத்தருவேயெங்கு
மிடிதொலைப்பவரோயெங்கும் வினையலைப்பவரோயெங்குங்
கடிமலர்த்தாரோயெங்குங் கனமுடையோரோயெங்கும்
படிதொழுமயிலைக்குன்றப் பதிதனில்விளங்குமன்றே* (௩௭)

வேறு.

பேறெலாம்பெற வடைந்தவர்தமக்கருள்பெம்மா
னறுமாமுகப் பரனுயர்சித்தனேடமர்ந்த
மாறிலாவள மயின்மலைநகரின்மாண்பனைத்துங்
கூறலாவதோவொருவரோர்நாவினைக்கொண்டே (௩௮)

நகரச்சிறப்பு - முற்றிற்று.

ஆ_விருத்தம் - ௱௩௨*





உ

# மயூராசலபுராணம்.

முதலாவது

## திருக்கைலாயச்சருக்கம்



மாதாவெனுஞ்சொற்கிணங்கநிதம் வழுத்திப்பணியும்வகையறியாத்
தீதார்சிறியர்தமககுமளி செய்யுமுமையாடருபுதல்வா
போதாதிகிரிப்படைக்கரப்பைம் புயன்மேனியனுண்மகிழ்மருகா
நாதாசிகரிததேவாவென் னைதீர்த்தருள்வதுன்பரமே* (க)

(வேறு.)

பொன்மயூரச் சயிலப்புரிவளஞ்
சொன்னமாமறைச சூதனைநோக்குபு
மன்னுநைமிச மாவனமாதவ
ருன்னியுள்ள மூவந்துரைப்பாரரோ (உ)

கங்கைவந்தநங் கந்தன்கணைத்துயர்
சங்குகன்னன்சூர்ச் சாய்த்தனனென்னவே
துங்கமாதவ நீமுனஞ்சொற்றதை
யெங்கண்முன்விரித் தோதுதியென்றனர்*(ங)

இன்னணம்பக ரந்தணரின்புறச்
சொன்னலம்புணர் சூதமுனிவரன்
மன்னுமாதவர் கேண்மினென்றேமகிழ்ந்
தன்னவண்ண மறையலுற்றனரோ* (ச)

நல்லசெய்யற மேமுதனுன்கையு
மொல்லைமெய்யடி யார்க்கருளோர்முதல்
வல்லிவள்ளிதெய் வானைமணாளன்றன்
செல்வமெய்க்கதை செப்பற்கெளியதோ*(ரு)

மாயிரும்புவி வானம்வரியராத்
தோயுறுந்தல முற்றுந்தொழுதிடுஞ்
சேயருங்கதைச் செப்புதற்கோர்பதி
னுயிரம்பரு வத்தினுமாவதோ* *(சா)*

திலகவாணுதற் றேமொழியீர்ங்குழற்
கலகவாள்விழி வள்ளிதன்காதல
னிலகுகாதை யியன்றளவோதுவ
னுலகெலாமுய்ய வுன்னுமுனிவரீர்* (எ)*

முன்னமேவு முதல்யுகந்தன்னிலே
பன்னுமிக்கடற் பாருளெத்திக்கினுங்
கன்னிபாகக் கடவுண்மறைமுதன்
மன்னுமாகம மாண்புமறைந்தன* *(அ)*

இல்லறத்தி னெறியுமியாகமுஞ்
சொல்லருந்துற வின்றவத்தூய்மையு
மல்லலாருமெண் ஞான்கெனுமாண்புடை
நல்லறங்களு மோயந்துநலிந்தவே* *(கூ)*

வீறுகொண்டிபல் வெஞ்சமயப்புட்கள்
கூறுகொண்டிசை வப்பயிர்கோதிட
வாறுகொண்டவி ருஞ்சடையண்ணறன்
னீறுகொண்டணி யுந்நெறிநீங்கிற்றே* *(ய)*

முந்தெழிற்றிரு மாலுந்திமுண்டகன்
வந்தெழுப்புமிம் மாநிலமாந்தர்க
ணைந்தெழுத்தை நவின்றனராகியோ
ரைந்தெழுத்தை யறைமதியற்றனர்* *(யக)*

இத்திறங்க ளனைத்தையுமெண்ணுறீஇச்
சித்தர்மாதவர் சேர்ந்தனரோருழை
யதத்னுக்குரைப் பாமென்றகத்திடை
வைத்தகாதல் வழாதுசென்றாரோ* *(யஉ)*

(*வேறு*)

துள்ளிச்சிலம்பார்மலரடியைத் தூக்கியைம்பாணெறுழினிகழு
வுள்ளிச்சிலம்பவிருத்தமிடு மொருத்தனுமையாட்கொருபாகன்
றெள்ளிச்சிலம்பாறணிசடிலன் றிருந்துந்தனியாக்கொண்டருளும்
வெள்ளிச்சிலம்பினடியடைந்தார் வேதஞ்சிலம்புநாவுடையார்* (௰௩)*

அந்திமதிச்செவ்வான்சடிலத் தமலன்பொற்றாளணியுமுடிப்
பந்தியுரிஞ்சுஞ்சேவடியான் பரவுகயிலைக்கொருகாவ
னந்தியடிகளடிபரவி நன்குபழிச்சவவ்விறைவன்
சிந்தைசெய்துய்த்திடவீசன் றிருமுன்றவத்தர்சென்றனரால்* (௰௪)*

(வேறு.)

ஒருகோலங்காணுதற்கொண் ணாதிலகுமலர்த்தாளனொப்பிறில்லா
னிருகோலங்கொண்டதிரு மேனியினான்முக்கோல னிசைநாற்கோலன்
வருகோலைந்தளனடலையாகவழற்கோவையுளான்மனத்துட்கொள்வோ
திருகோலமிடத்திருவோலக்கத்தினிருந்தபரசிவத்தைக்கண்டார்* [ர்

கண்டவுடன்புளகமெய்தி யுடல்பனிப்பவுளமுருகிக்கண்ணீர்வாரக்
கொண்டதிருக்கரஞ்சிரத்திற் கூப்பியரகரவென்னக்கூறுமோதை
தெண்டிரைநீரொலிகடுப்ப வைந்தினுமெட்டினும் வணங்கிச்சிவாநந்தத்
துண்டதகங்கொளத்தேக்கிமேல்வழிதலெனத்துதிகளோதலுற்றா [ர்த

கருங்குவளைநிகர்மிடற்றெங் கண்ணுதலேமுத்தலைவேல்கனன்மான்கை
மருங்குவளைந்திடவிமிர்ந்தமுலைமலைமாதணிகடவுண்மணியேசூலா [யா
னெருங்குவளைக்குலமுராலும்பண்ணைதிகழ்தில்லைமன்றினிருந்தஞ்செய்
யொருங்குவளைத்தடியரிடர்முக்குறும்பைக்கடிந்தருளுமம்பரேறே [வோ

மாலயனிந்திரன்முதலாங் கடவுளர்வந்தடிவணங்கிவாழ்த்துமூவா
மூலமுதலாம்பொருளே முனிவருளத்தகலாதமூர்த்தியேநின்
சீலமுணர்ந்தித்துணையென் றியாவர்வழுத்துவாவெள்ளிச்சிலம்பின்மே
பாலவிலோசனவரவா பரணசிவசங்கரவெம்பரமபோற்றி* (௰௮) [வும்

அன்பருளத்திடையகலா தாநந்தச்சுவைசுரக்குமமுதேயென்று
மின்புருவமாயிலகுந் தவமேயத்தவமதனாலெய்தும்பேறே [லோய்
பொன்புனைமான்முதலமரர்க் காய்ந்திரவியெயிறுகுத்த போரில்வல்
னின்பெருமைசொலற்கெளிதோ பொன்மலைவில்லேந்துதிண்டோணிம
லாபோற்றி*

என்றுபலவாறுதுதித்தேத்திநின்றமுனிவரனை யினிதினோக்கி
நன்றுமதுதுதிவியந்தா மெவன்குறையுற்றீங்கடைந்தீர் நம்முன்னீவீ
ரொன்றுதுயர்தமைப்புகல்வீரெனக்கனிவாய்மலர்ந்தனனா லுமையாளோடும்
பொன்றிணிமாமணித்தவிசினமர்ந்திலகுங்கைலைமலைப்புத்தேளன்றே (உ௰)

இத்திருவாக்களித்தவுட னிறைஞ்சிமலர்க்கரங்கூப்பி யெந்தையேநின்
சத்தியவாகமவேத சாத்திரங்கள்பாடழிந்து தரணிதன்னி
லெத்திசையும்விளக்கமிலா திருந்தவினாலவை துலக்கமெய்தாநிற்ப
வித்தகநினதடியடைந்தே மெமக்கிரங்கியருள்புரிக விமலவென்றார்* (உக)

அவ்வாறேயருள்புரிந்தா றும்மினுப்பிலேலகுமென வமலன்கூறச் [தோ
செவ்வாய்வெண்ணகைபாகற்றொழுதுவிடைகொண்டகன்றசெய்தவத்
ரிவ்வாறுநலம்பெறுதற் கெத்தவஞ்செய்தனமோவென்றிறுமாப்பெய்தி
தெவ்வாயபலசமயங்கெடுஞ்சமயம்பார்த்திருந்தார்சிந்தித்தாராய்(உஉ[த்

(வேறு.)

இவ்வணமேகிய பின்னரெம்மண்ணலி னெண்ணத்தா
னவ்வணமேசிற் சிலபகல்கழிதர வாங்கோர்நாட்
கொவ்வையிளங்கனி வாயிபயந்தரு கொம்பன்னா
ளெவ்வமிறண்புன லாட்வுளத்திடை யெண்ணுற்றாள்* *(உ௩)*

வானவர்விஞ்சையர் கேசரர்சித்தர்கள் வரியாழின்
கானவர்தும்புரு நாரதரந்தணர் களுமேவத்
தானுயரும்பத மேயருள்கைலைச் சைலத்தின்
மேனிலவோரிடை யேவினளுலகை விரித்தாளே* *(உ௪)*

வேறு.

அவ்விடைக்கற்பக மகிலஞ்சந்தன
மெவ்வமில்சண்பக மாதியீர்ம்பொழில்
செவ்வையினமைவுற நடுவண்டீம்புனற்
றிவ்வியதடமொன்று சிருட்டித்தாளரோ* (உ௫)

சந்திரகாந்தத்தின் படிகள்சார்ந்தொளி
ரிந்திரநீலத்தின் கரைகளேய்ந்ததிற்
செந்துகிர்விளிம்புகட் சேர்ந்ததாமொரு
சுந்தரத்தடத்தெழில் சொல்லற்பாலதோ* (உ௬)

தேம்படுபாசிலைச் செய்யதாமரை
யாம்பலங்குவளைக ளரியநீலங்கண்
மேம்படுவலம்புரிச் சங்கம்வெண்மதி
சாம்பொளிமுத்த மத்தடமலர்ந்தவே* *(உஎ)*

கோகிலமினியதே மாவிற்கூவுத
லேகநாயகன்கழு லேய்ந்ததும்பினை
யோகையோடுறுமுலைமக குலாத்துமாரவுன்
ளுகமதடைதியென் றழைத்தல்போலுமால்(உஅ)

அத்தனிமதுமலர்ப் பொழிலினுய்மயில்
சித்திரத்தூவியஞ் சிறைவிரித்தொளிர்
முத்தரிச்சிலம்படி பெயர்க்குமோகனக்
கொத்தெழின்மாதர்போ னடங்குனிக்குமால்*

ஆழ்தருதீம்புன னிரம்பியாய்மணிக்
காழ்தருதடந்திகழ் கடிமென்காவினைச்
சூழ்தருபொன்மதி னிலவித்தூமணிப்
பாழிமால்வாயிலோர் பாங்கர்மேவுமால்* (ஙய)

(வேறு.)

இன்னபொற்பின் றடத்தையிமைப்பதன்
முன்னமன்னை முடித்தனளிச்செய
லுன்னுங்கால்வியப் பிதன்றுலகெலாந்
தன்னுணின்றோர் கணத்தினிற்றந்ததால்*(ஙக)

தூயபூம்பொற் றடத்தினிலாய்மணி
வாயில்காப்பச் சிவகணமன்னிறை
மேயசீர்ச்சங்கு கன்னனுமேன்மையார்
தூயவன்றனை யேவினள்சொல்லுவாள்* (ஙஉ)

•வைத்தகாவல் வழாவகையாம்புன
லித்தடத்தினின் றேகுமளவில
ணைத்திறத்தகை யோர்களுமெய்துற
வுய்த்திடாதுறை யீங்கெனவோதினாள்* (ஙங)*

ஓதவாயிற் புறத்தினி லுற்றன
ளோதனல்லுருப் பங்கிடுங்கைதான்
வேதன்மாயவன் விண்ணவர்தந்தகை
மாதர்சூழத் தடத்தினில்வந்தனள் ❋ ❋(௩௪)❋

வேறு.

குன்றுவெழிலே கொளும்வாவியிடைச்
சென்றாடினளந் சீராருமையாள்
பொன்றாழ்திதலைப் புணர்பொம்மன்றூலைத்
துன்றேரிடையார் துணைசூழ்தரவே ❋ (௩௫)❋

தெருளேபெறு சித்தர்கடோர்வருமெய்ப்
பொருளாட நலந்தருபொற்பாழி
சுருளார்திரை தூய்புனலாடுதறன்
னருளாழி யிதாமெனலாகுமரோ ❋ ❋(௩௬)❋

திருமங்கைதிகழ்ந்தொளிர் வெண்கமலத்
தருமங்கைமருங் குறவாய்மயிலேர்
வருமங்கிலனங் களுள்வாவுதல்போ
லொருமங்கையுலா யினணீரினுளே ❋ (௩௭)❋

உழுதாடியரிக்கண மொண்கமலக்
குழுமாமலாமென் மதுகூட்டினுமச்
செழுநீர்குழறா வினடைம்பிறவி
யெழுதாவகைபின் னருவேலையே ❋ ❋(௩௮)❋

தன்னாயகனேர் பெறுதார்சடைமேற்
பன்னாளினும்வாழ் பாகீரதிபே
றென்னாமெனவே யிருதாளின்மிதித்
தன்னீரிடையா டினளாரணியே ❋ ❋(௩௯)❋

பாரார்தருபல் லுயிரண்டமெலாந்
சீராயருளுந் சிவசங்கரியா
ணாராயணிநாயகியத்தடநன்
னீராடினணீடரு மஞ்சினளாய் ❋ ❋(௪௰)❋

(*வேறு*)

அறத்தலைவியச்சிலம்பி னமைத்தமலர்த்தடத்திவ்வினை யாடுங்காலைக்
கறுத்தமணிக்களத்தனந்த வனாச்சாரமுறுமேடிக்கவனங்கூர்ந்தங்
குறத்தனித்துவிளங்கியதோர்வாவியைக்கண்டதிசயித்துள்ளுவகைபொ
வெறுக்கையொளியெனத்துலங்கும்வியன்றடமிங்கேதுபுதிமதன்ன [ங்கி
வெண்ணி (௪௧)

ஆவியெலாம்படைத்தளிக்கு மமலனங்குமேவும்போ தம்மைமுன்னம்
வாவிமருங்கியாரோனும் வாராமற்காத்தியென வகுத்தமாற்றங்
காவல்கொடங்கிருந்தசங்கு கன்னனுலகெங்கணுமே கலந்துநின்ற
தேவனுக்குமோவன்றென் றுணாயாடாதிருந்தனன்மேற்செயலையோர
ன் * (௪௧)

பிஞ்சுமதியணிசடிலப் பெருமானத்தடக்கரைசேர் பெற்றிதன்னை
வஞ்சியிமமலையினற மடமயில்கண்ணுற்றெழில்சேர் வாவிநீங்கி
யெஞ்சலிலாதுளத்தெழுந்த பெருநாணத்திடைமூழ்கி யிடருற்றேகி
மஞ்சொலிப்பக்கலைதிருத்தி வஞ்சியரோடொளிப்பதனை வளாவ்கண்
[டான் * (௪௨)

தையலுளவிருப்பாலிங் கியற்றியநீர்விளையாட்டிஞ் றன்மைதன்னைப்
பையநமக்குணாயாம லிருந்தனனிச்சங்குகன்னட் பரிவிலானென்
றையன்மிகவுஞ்செயிர்த்து மீளவும்வந்தனையன்முக முதனைநோக்கித்
துய்யவுமைபுனலாடுஞ் செயனமக்கிங் கோதாததுகளினலே* (௪௪)

வந்தவபசாரத்தா னமதுகணங்களிற்றலைமைவாய்ந்தநீதா
னிந்தவுருவிழந்தவனி தன்னினரவுருவெய்தியறியென்னச்
சிந்தைதெருமந்தினியென்செய்குவலென்றடிவணங்கிச்சிரமேற்கைசேர்
தெந்தையேயெவ்வுலகும்படைத்தவனேயெனத்துதிகளியம்பலுற்றான் [த்

(வேறு.)

மூக்குணமாய் மூவுருவாயாக்கல்காத்தன்
முடித்தவிவைமுடித்தருளு முதல்வாபோற்றி
யக்கறுகுகொன்றைதும்பை செக்கர்வேணிக்
கணிகதருளுந்தற்பரனே யரனேபோற்றி
யிக்குவில்லைக்கைபிலேந்து மதனன்மாள
வெரித்தநுதற்கண்ணனே யிறையேபோற்றி
தக்கவர்களுளமகலா தாகத்தேன்
றண்மாரிதூவுசல தரமேபோற்றி (௪௫)

மலைக்கொடிக்கோர்பாலுதவியிலங்கும்வெள்ளி
மலைக்கிழவனேபவளவண்ணாபோற்றி
யலைக்கடல்வயிடற்றடக்கி யமரராவி
யழியாமலன்றளித்த வரசேபோற்றி
கொலைக்கரியையலகைகளுற வுரித்துப்போர்த்த
கொற்றமிகுமூவிலைவேற் கோவேபோற்றி
சிலைக்கிசையநெடுஞ்சைலங் குனித்தவெற்றிச
சேவகனேபாவகத்தின சிறப்பேபோற்றி* (௪௭)

விடநாகமணிந்ததிரு வுருவாபோற்றி
விடைக்கொடியேந்தியகரத்து வீராபோற்றி
படநாககங்கணனே போற்றிவேதன்
பஞ்சமுகத்தொருமுகத்தைப் பறித்தாய்போற்றி
திடமிகுநதவிடபமூகைத் தோனேபோற்றி
சிறுமானைத்தரித்தருளுஞ் சிவமேபோற்றி
வடகிழவிற்சனகாதி நால்வருக்கும்
வாய்மலராதுண்மையினை வகுத்தோய்போற்றி*

அனந்தகுணனாகியெல்லாந் தானேயாகி
யங்கிங்கெனுமலெங்கு மமர்ந்தாய்போற்றி
நினைந்தவடியாருளத்தின விழைந்தவெல்லா
நிறைதரவங்கவர்க்கருளு நிதியேபோற்றி
சுனந்தருக்காவாலவனந் தன்னில்வானந்
தூக்கியபொற்பதநடனத் துரியாபோற்றி
சினந்தருவெம்பிறவியெனுங் கோடைதீர்ப்பான்
செறிந்துவருடிக்குமுகிற் றிரளேபோற்றி* (௪௯)

பூதுக்குறைவிலாவெளியே னன்பிலேனின்
புண்டகத்தாடுணையேத்த முயலுகில்லேன்
விறுக்குறைகுடுஞ்சடில வினையேன்றன்பால்
வினைவதறிதோபிழைதான் வெகுண்டுநீயே
யதிர்புறவிக்கொடுஞ்சாப மளித்தாயின்னே
யன்றியிதுதீர்ப்பவரா ரடியேற்கெந்தாய்
புதுக்குசுவைக்கவிபொழிவோர்க் கருள்சுரக்கும்
புண்ணியனேயிச்சாபம் போகுமாறே* (௫௰)*

நாயினேற்கருட ருவாயென்றுசங்கு
கன்னனங்குநவின்மாற்றநம்பன்கேளாப்
பாயதிரைநீருடுத்தவுலகின்மேவிப்
பயன்றருநன்னெறிமருவப் பரந்தவேதந்
தூயசிவாகமமிவற்றைத் துலக்கஞ்செய்து
தோமறுசைவந்தழைப்ப மூயன்றுநந்தஞ்
சேயினுடனேயென்று சமமாய்நின்று
செருச்செய்வாயோவன்றேதீருஞ்சாபம் (௫௧)

அக்காலைநமதுருவோ டமர்தியென்ன
வரனருளியெழுந்தருளச் சங்குகன்ன
னெக்கவருந்துதிபுரிந்தே யிறைஞ்சிநாயே
னுய்ந்தனனுய்ந்தனனின்றே யென்றுபல்கான்
மிக்கமண்மேற்றாழ்ந்தெழுந்து புளகங்கூர்ந்து
விழியிரண்டுந்துளிபனிப்ப விகற்பமின்றி
யக்கணத்திற்புவியதனி லடைவான்வேண்டி
யார்வமோடுளத்தினிடை யெண்ணுவானல் ❋

(வேறு.)

அனைத்துயிருந்தந்தளிக்கு மம்மைசெயுநீர்விளையாட்டதனையாங்குத்
தனக்கறிவியாதிருந்த சங்குகன்னன்றனையரன்சபித்தல்சொற்றும்
வனப்புறுமன்னேன்புவியில் வந்தரியபாலசித்தவடிவமாகக்
கனைத்திடுமாழ்கடலிடைநின் றெழுந்தலம்விளைழந்தினிதுகழறுவாமா [ல் ❋

திருக்கைலாயச்சருக்கம்

முற்றிற்று

ஆ விருத்தம் - ௨௱௫





உ

# மயூராசலபுராணம்.

## இரண்டாவது

## சங்குகன்னர்

## திருவவதாரச்சருக்கம்.



மலைமுனிக்கருடந்தானை மறலிபாலெனைத்தாரானை
நலமலிவனம்வந்தானை நவையுளோரகம்வாரானை
யலைவறந்திடக்கண்டானை யடியர்செய்பிழைகாணானை
யிலைகுலாமயில்வேலானை யிறைஞ்சிநன்மகிழ்கூர்வாமே*(க)

(*வேறு*)

அலகில்சோதிபொன் னம்பலத்தாடுவானருளா
லிலகுவாண்முகச் சங்குகன்னப்பெயரிறைவ
னுலகிற்றோன்றிடு கதையினையாமினி துணரப்
பலகலைக்குமோ ருறையுளாந்தலைவநீபகர்வாய்* *(உ)*

என்றுகூறிய சௌனகாதிபர்களுக்கினிதாய்த்
துன்றுநற்புகழ்ச் சூதமாமுனிவரன்றுகடீர்
மன்றலார்கடம்பணிபுய வேலவன்மலர்த்தா
ளொன்றுளத்தினோர்தன்புடன்கேண்மினென்றுரைப்பான்

மாற்றியித்தனு வெத்தனுவாகவிம்மண்மேற்
றோற்றுவமெனச் சங்குகன்னப்பெயர்த்தூயோன்
சாற்றுமாணிட யோனியின்வரிற்றுயர்தருமக்
கூற்றகற்றியே தோன்றுதனலமெனக்குறித்தான்* *(ச)*

(வேறு.)

கயிலைமலைக்கிறையோனருள்வண்ணங் கடல்புடைசூழ்தருகாசினியூடே
மயிலைமலைக்கருகாயொருதானம் வந்தரிதாகியமானிடனுருஞ்
செயலையகங்கருதிக்களிமேவித் திரைநுரைசேர்தருமார்கலிசேரா
வெயிலைவிரித்ததிகாலையின்மேவும் விரிகதிரோனெனவெய்தினனம்மா.

(வேறு.)

செஞ்சடிலமண்டலமுந் திருச்செவியிற்குண்டலமுந் திருவெண்ணீறு
விஞ்சியகண்மணிதயங்குமேனியுஞ்சின்மூத்திரையும்விளங்குந்தண்டுஞ்
சஞ்சிதமெலாம்பொடிக்குங் கற்பமுறுபொக்கணமுந் தன்பான்மேவித்
தஞ்சமெனுமடியவர்கள்சஞ்சலந்தீர்த்தவர்தலைமேற்சாத்துந்தாளும் (௬)

அங்கலிங்கசங்கமமு மாகமபாகத்தையருடருசெவ்வாயுஞ்
செங்கலிங்கமிலகியதோர் திருமெய்யும்புன்னகையுஞ் சீரான்மிக்க
துங்கமுறுந்திருவரையி லிலங்கோடுமடிபணியுந்தொண்டருள்ளச்
செங்கமலமலர்விக்குந்திருநோக்குஞ்சித்தியெட்டுந்திகழுமாண்பும் (௭)

ஐந்தெழுத்தையருங்கலனாப் புனையுமெழினுத்தலமு மடியருள்ளம்
வந்தெழுமெஞ்ஞானபா னுவினொளியுந்திசைவியக்கு மௌனச்சீருஞ்
சந்தனத்தென்சைலமமர் திருமுனிவன்முதலானோர்தம்மைவானாட்
டிந்திரனைநெடியோனை நான்முகனையொருபொருளி னெண்ணுவீறும்.

(வேறு)

இத்தகையனைத்தினையுமுற்றரியவற்புத விலக்கணமியைந்துவயதோர்
பத்தெனவழுத்துமுருவத்தொடுகுணக்கடல் பரப்பினுளமீன்கடனது
மெய்த்திருவினிற்சிறிதுறக்கருணைவைத்துவளை மேவுகரையண்மியருகே
வித்தகமிகுத்தபொழி லூற்றுறைவதற்குளம் விழைந்தவணிருந்தனன
[ரோ.

அத்தலமதிற்றுதிகொள் சித்தர்கள்களித்துறையுமாச்சிரமமொன்றுகா
வெத்திசையினும்போதமெய்க்கதிர்விரித்திரவியென்னவவணுற்று [ணெ
சித்துகள்பிரிந்துசிவயோகநிலைநின்றுமறைதேர்சனகராதியுணர[யர்தருஞ்
வித்தகமுணர்த்தியருளத்தனிகர்த்தடியர்விக்கறறவோதிவருநாள்.

மானவர்களிற்றகுதியானமனமுற்றறிவுமாணவுடையோரானுமினீ [ஞே
தானுயர்கணத்திறைவ ஞேவலதுசித்தர்க டமைப்பணிகொளுந்தலைவ
ஞானமுனிவர்க்கருளுமெய்க்குரவனேவகிலசுற்றவமிழைத்தவதனு
லேலையுலகத்தினையொழித்திவணடைந்தனைகொலீதருள்கவென்றனர
[ரோ*

நின்றவர்தமக்குள மினிக்கும்வகையென்றுமுயர் நித்தனுலகத்தையனு
துன்றியசிவாநுபவ முற்றிலகுவோமரிய சுத்தவுபதேசமுலகோ [தித்
ரொன்றவருள்வாயெனலுமத்தலைகயபத்தர்மனமொத்துநயபத்திபுரியப்
பொன்றுதலில்சைவமறையின்றிறமுணர்த்தியருள்பொற்பொடுமமர்ந்த
[னனரோ*

சித்தரினமெத்தவு மடுத்தருகிருக்கவவர்சித்திநிலைபெற்றிடவிதஞ் [விற்
சுத்தசிவதத்துவமறைப்பொருள்செவிக்கதிசுவைக்கொளவுணர்த்தியுண
சற்றெனும்விருப்பினையொழித்துறையிடத்தின்மிகுசத்வகுணசித்தர்க
பத்தியுடனுற்றிணையில்சித்தர்செயலைக்கனிவுபற்றியிஃதொன்று[ளொலாம்
[புரிவார்* (௰௩)

பாலவயதாகவலை வாரிதியின்மேவிவரு பான்மையுமலாதளவிலாச்
சீலமுறுசித்துபுரி செய்கையினுமேபால சித்தனெனநாமமுறுவி
யாலவிடமேயமுத மாயவிலுவானிவ னலாதிலையெனுநினைவொடுஞ்
சாலநலமேவுதுதிகூறிடவவற்கினியதண்ணருள்சுரந்துறையுநாள் (௰௪)

அத்தனருள்பெற்றவர்களுற்றபெருமுக்கண்மலையாதியவரைக்கணனுகி
சித்தர்கடமக்கரிய வற்புதமுறப்புரித சித்திநிலைமுற்றுமுதவித் [ச்
தொத்தலர்வனத்தமருசுற்றவர்களுக்குமொருதூயசிவபோதநல்கி
யித்தகைமையோடினிய சித்தனுலவிப்பழமை யெய்துமிடமுற்றனன
[ரோ*

அங்கணமர்போதினிடை யெங்கள்சிவனாணைவழி யந்தரமுநாகருலகும்
பொங்குதிரைவாழிசுல வும்புவியுநாடிவரு புந்திபெறுநாரதனெனுஞ்
சங்கையுறுமாமுனிவன் வந்திடவிசேடமொடு தங்குமுபசாரமாதி
மங்கலமெலாம்விதியினன்கினிதுநல்கிமுனிவனேற்றுமகிழா (௰௬)

கோலமருவுஞ்சித்தர்கோனிடைமிகும்பத்தியான்முனிவனுங்கூறுவான்
சீலமுடனிங்குக்குமேலைவருணன்றிக்கிறேடரியவின்புற்றிடுஞ்
சோலைகணெருங்கிக்கலேலெனாநறும்புட்கடேய்மையின்முரன்றெருப்பிலா
மாலையடையும்பொற்பின் மாமயிலெனும்வெற்புவாழ்குவதினஞ்சொற்
[றுமே.

அக்கிரியினற்புதமுணாக்குதலெனக்குமரிதத்தலையினுற்றவரொலா
மெக்கலையுமெத்தவமுமெய்ப்பொருளுமெப்படியெணத்திடைநினைத்தய
யொக்கமருவிக்களிசிறக்கவொருபச்சைமயிலுற்றறுமுகக்கடவுளை[டியே
மிக்குளமிருத்தியொருவெற்புருவெடுத்தரியமெய்த்தவமியற்றியதுபின்

மஞ்சுதவழும்பொதியை யங்கிரியிருந்துதமிழ் மண்டலநிறைந்திடவளர்
நெஞ்சகமலர்ந்திலகு கும்பமுனிவன்பணிய நேயவருடந்தகுரவன்
கஞ்சனதுகங்குலைய முண்டகமெனுங்கர தலங்களினறைந்தெனதுளத்
தஞ்சலெனவந்தருள்செய் கந்தனிவர்வாகனமதாகிமகிழ்வுற்றதெனவே.

வீணைமுனியோதவஃதேதுமயின்மேவியொருவெற்புருவமாகியுலகிற்
காணவியைகாரணம தேதுபுகலென்றுலகு காதலுறுசித்தன்வினவத்
தாணுவினுளத்தடல்கொள்கோபமுழுதற்றினளிசாலுளுருகிக்கனியவே
பாணெனுமனைத்துமுயர் யாழொடுபிணைத்தினிது பாடுமுனிவன்பகரு
[வான்.

(வேறு.)

சங்குகன்னத் தனிப்பெயர்பூண்டுளான்
பொங்குவாரியிற் போந்திடுசித்தர்கோ
னிங்கமர்ந்த தியம்பினமாமயி
லுங்கமாமலையானதைச்சொல்லுவாம் (உக)

அவதாரச்சருக்கம்

முற்றிற்று

ஆ விருத்தம் - உ௰௬

(இ)





# மயூராசலபுராணம்.

## மூன்றாவது

## ஸ்ரீமயிலைமலைச்சருக்கம்.

மதுமலர்க்கடம் பணிபுயமுருகனை மயின்மிசைவருவானை
விதுமுகக்குற வனிதையையனுதினம் விழைந்தமோகனைநீங்கா
ததிர்பொலன்கழ லடியணையடியவ ரகத்திருடொலைப்பானை
ாதியணிந்தசங் கரன்மகிழ்குமரனை நாந்தொழுதுய்வாமே* *(க)*

(*வேறு*)

[illegible]னிவ்வணஞ் சொற்றிடநைமிசவனத்து
[illegible]த்தினர் மாமனத்திடைமகிழ்மலியா
[illegible]ய சித்தற்குநாரதனன்பா
மறுதுமாமயி லோங்கலாயுற்றதையுரையாய்* (உ)*

என்னவத்தவ ரன்புளத்தெய்தியேவினவ
வன்னபாலசித் தாதிபன்றனக்குநாரதன்றான்
சொன்னவாறினிக் கேளுமின்சொல்லுதுமென்று
மன்னுமாதவ நாயகன்குநன்வாய்மலர்ந்தான்* *(ங)*

முன்னமாயையென் பவடனைக்காசிபன்முயங்கப்
பன்னுசூரபன் மாவெனப்பகர்தருமசுரன்
றன்னுசியன்வெங் தாரகனசமுகி துயக்கின்
மன்னுதானையா மசுரரோடுதித்தனன்மண்மேல் *(௪)

உதித்தசூர்முத லவுணரோடருந்தவமுஞற்றி
மதிச்செழுஞ்சடை யண்ணல்பால்வரமெலாம்வாங்கிக்
கதிக்குநேமியன் முதற்கடவுளரைவென்கண்டே
யதிர்ப்புறுந்திரையாழியின்மகேந்திரத்தமர்ந்தான் (௫)

அமர்ந்துவெய்யகோ லாயிரத்தெட்டெனுமளவிற்
சமைந்தவண்டத்துஞ் செலுத்திவெந்தானையாங்கடலை
நிமிர்ந்துபோர்செய விடுத்தருந்துயருறநெருக்கித்
தமந்தராப்புவித் தேவரைச்சிறையுறத்தளைந்தான் *(௬)

ஆற்றவுந்துய ரெய்தியேகடவுளரானோ
ரேற்றிவர்க்கருள் கடவுள்பாற்கைலையினெய்தி
மாற்றருந்திறற் சூரனல்வருந்தியமாற்றஞ்
சாற்றிப்போற்றலு மப்பரன்றன்னருள்புரிந்தே *(௭

கந்தவேடனை நோக்கிவல்லசுரர்தங்கணத்தைச்
சிந்துமாறுவென் றிடுதியென்றுய்ப்பவச்செவ்வேள்
வந்தவானவர் தங்களைநோக்கிவஞ்சகர்தம்
வெந்திறற்செருப் பாயினிவெருவனமினென்றான் (௮)

அந்தவாசகஞ் செவிவழியமுதெனத்தேக்கி
யுந்துமானந்த வெள்ளத்தின்மூழ்கியவும்பர்
கந்தவேள்பத மலரிணையுள்ளுறுகனிவான்
முந்தவீழ்ந்துவீழ்ந்திறைஞ்சினர்துதிபலபொழிந்தார்

அற்புதத்தின னிடரினியகன்றனனென்று
றும்பல்வானவ னம்பதிக்குறுகணின்றென்று
யப்புவானவ ரொம்முயிர்ப்பன்னியர்களத்தின்
வம்புலாமண மங்கலம்வாழ்த்தனவென்றார்.

இன்னவாறவ ரிசைத்தெமக்கரியபேறெய்த
மன்னயிற்கரக் குமரநாயகன்றனைவழுத்தி
யுன்னருஞ்சிறப் பனைத்தையும்புரிந்துளத்துவப்பாற்
பன்னலந்தரு பூசனைபன்முறைசெய்தார் * *(௰௧)*

முழுதுமாகிய முக்கணெங்கட வுளுக்கன்பா
யெழுதொணாமறைப்பொருளினையருள்செயுமிறையோன்
பழுதுசெய்திடு சூர்முதற்கொடியனைப்பாற்றித்
தொழுததேவரைக்காப்பத்தன்னுளத்திடைச்சூழ்ந்தே(௰௨)

வீரவாகுவே முதலியவீரரும்வெய்ய
சாரதப்படைக் கடலும்பின்சார்ந்திடவேகித்
தாரகன்றனைக் கிரியொடுமயில்கொடுதடிந்து
சூரன்றன்மிசைமகேந்திரமடுத்தமர்தொடுத்தான்(௰௩)

அரிமுகன்றனைப் பானுகோபன்றனையவுணப்
பரவையைப்பல படைகளாற்றடிந்துபன்மாயை
விரவுருக்கொடு சூரன்வெம்போரினைவிளைப்பச்
சிரமுரங்களைவருந்தொறுமெழுந்தொறுஞ்சிதைத்தான்

இத்திறம்பல வுருக்களையறுமுகனிகுப்பக்
குத்திரத்தகால் புனன்முகில்வளியுருக்கொடுபல்
லத்திரந்தொடுத் தசுரனங்குமரன்போலடர்ந்தா
னெத்திசாமுகங் களும்பலவண்டமுமிடைந்த *(௰௫)*

அடர்ந்துவெஞ்சமர் புரிந்திடுஞ்சூரையாங்காங்குத்
தொடர்ந்துவெங்கடும் படைகளாற்றடிந்திடச்சூரன்
படர்ந்தசூதமாக் கடலிடையண்டங்கள்பரிப்ப
வடங்கிளைப்பெருந் தருவெனநின்றனனண்ணி * (௰௬)*

நின்றகாலைவே லேலவினனறுமுகவிமலன்
றன்றுசூதமாந் தோற்றமதழிந்துமுன்னுருவாய்க்
குன்றிடாவமர் செயவவேல்கூறிரண்டாக்கச்
சென்றுமஞ்ஞையுங் கோழியுமாயினன்சினத்தே*(௰௭)

படர்ந்தமஞ்ஞைமே லிறைபதமூன்றிடப்பரிந்தே
யடர்ந்தவெஞ்சிறைப் புடைப்பினாலண்டத்தினடுக்கு
மிடைந்தவைவகைப் பூதமுங்குலைந்திடவெற்புந்
தொடர்ந்தசூறையாற்றுகள்படவெங்கணுஞ்சுழன்றான்

சுழன்றசாரியின் வேகத்துஞ்சிறைகொள்சூறையினு
மழன்றசீற்றத்து மசைவிலாக்குமரனுற்றடர
வுழன்றசூரன்வெஞ் சீற்றமுமாற்றலுமொருங்கே
யிழந்தயர்ந்திரும் புவியினிலிருந்தனனிளைத்தே* (௰௯)*

நின்றசூரன்வல் லவுணராங்கடலையுநீண்ட
குன்றமுந்தடிந் திலகியவேற்கரக்குமரன்
மன்றற்பூஞ்சரண் டொடக்கத்தாற்சூக்குமவடிவாத்
துன்றுநல்லுணர் வெய்தியேயின்னணந்துதிப்பான்*

(*வேறு*)

தனதுதிருவருளினுலகுயிர்க்கண்முழுவதுமருள்செய்தருணிபகவதிகுமரியெம்
பனைகதிரிபுரையமலை விமலைநிகர்தருவதனிபகரரியவிமயமுதவும்
புனிதைபுளகிதமிருக மதமகிலினளறுவழிபொழிதிதலைசிதறுநகிலொண்
கனசிகரவெழிலியுமை யவண்மடியினருமையொடு கனியமுதமயில்புதல்வ
[னே*

வரியரவமிறுகுதிரு வரையமலனருணமெரி மழுவொலிசெயுந்தமருகம்
பொருவில மணிவிதியினடு தலைகரியினதளடலைபுகலுமறுபதமிசைதர [ள்
விரியுமதுவொழுகிதழி யிலைகளணிதருபரமன் விழைவினிணைதருமுலையவ
பரிவினுடனனதுசுதனெனமகிழுமொருகுமரபணியுநெறியருடருவையே*

தடமுலவுகுளிர்கமல வறுமுகமுமொருபனிருதனிவிழிகளுமும்வனசமு
மடமையறுமடியரிடர் கெடவவர்கடவமலியவளர்பனிருகரமுளரியு
மொடிவில்பலபிறவிதொறுநலியுமுயிர்மருவவொளிருபயபதமலரதுமமுங்
கொடியவனெதிருறவெனது தவமகிமைதனையுலகர் குயிலுவதுமரிதரிதரோ*

கடவிகடதடமதம துலவுகரிமுகவனொடு கனிவுபெறவருதுணைவனே
யிடமதனிலுறைவிபுதர் மணிமுடிகள்வருடுதலி னிசைகுலிகமுறுசரணனே
பொடிபடவென்மலமுழுது மறுதிசெயும்வகைதரிச னமதருளவருபுனிதனே
விடையருளவிதுதருணமெனதுமறுவகலவினைவிடியவெழுதருபரிதியே (௨௪)

உன திருநாமமொரு தரமவிலுவோர்பிணிகளூறுபிடிகளைவாறுமி
யினறுகயிரோகமய திடையில்வருவேதன்முடிமெபறூதுவரியாவுமறவே
புனிதமடைவார்களென மறைகண்முதலாயகலைபுகலுவதுநீதியதுவா
மனதினினைவோர்கள்வினை பொடிசெய்வடிவேலுருவும்வகையருளிறே
[டுசெயலால*

எனதுடலமதிபுநித மருவியதுனருளின்மிக வெவருமுணருமுயர்வுகக்
தனதுபதமடையும்வகை யருடியெனவசுரன்மொழியுமாயதனைமுருக
னினதுமனதுளவிழைவுபுகறியெனவசுரகுலநிருபனுளமகிழ் [ன்மயிழா
பனகமணிதருபரமனுதல்விழியின்வருகுமாபசிபமயிலுரு [விலுருவிப்
[மருவியே* (உ௬)

மறைமுடியினந்தமுனி வரர்மதியினந்தமொளிர் வனசமலரின்பவடியே
நிறையுவகைமூந்தியெனதுருவிடைவதிந்திலகநெறியொடுசுமநதுழலவே
குறையகலவினறுவர மருளரியயன்பரவுகுணநிதியெனுஞசலதியே
துறைபலநெருங்கமுது கவிவலர்சொலும்பனுவ றொடையெனவணிந்த
[புயனே*

(வேறு.)

என்றனந்துதிகணவின் றசுரகுலாதிபனிசைத்த விசையைக்கேளா
நன்றவனைமளிப்பமுன மசுரகுலக்கொடுந்தொழிலா னவையடைந்தா
யின்றவையெலாமகலமயினமலையாய்க்தவத்தோராண்டிருப்பையாயின்
மன்றவெமைத்தாங்குறுவா கனமாவாயெனதிருவாயமலர்ந்துபின்னு
[ம*

எவ்வுயிராவும்புரிந்த வினைக்குரியபயனைத்துமெய்நாள்சென்று
மவ்வுயிரேபிறந்தடையு மாதலினீயிப்பிறப்பிலாற்றின்ற
கவ்வையுறுபவமனைத் தும்பிறந்துதொலைத்தாலல்துகழிவுறுதாற்
செவ்விதினீயுணர்வைமுனகதேவரையுமேவல்கொண்ட திறலோயென்
[றான்

அன்னவுரைக்களிதுளும்பி யிகலுலவுந்தகுலர்குலத்தேந்தலெந்தா
யன்னவிதமேபுரிவ லினறெனககுத்தானநிலையருளுகென்னக் [கா
கொன்னுனைவேலிறைபெண்ணைக குத்தரமாவிந்தியமென்குன்றிற்றெற்
மன்னியகற்புவியினிடை வைகுதியாலெனவவனும்வணங்கிபபோனான்*

அவ்வாறேயத்தலத்தி னத்தனருள்பூரணமா வசத்துட்கொண்டு
செவ்வாமபன்மலாவயற்சேர் தொண்டைநாட்டுநாட்டித்திசைமயங்க
வொவ்வாமலோங்கலுக்குப்பொன்னேங்கல்விலங்கலெனுமுனையைப்பூணத்
திவ்வாமலோங்கினன்மயிலோங்கலெனும்பெயரிற்றகுவர்கோமான் (௬௧)

கற்றண்டரிந்திரன்மா லயன்முதலோர்மனதண்டக்காணுதோங்கி
யுற்றண்டவடுக்கனைத்துந் துருவியெழுதருசிகரமுருவதம்தோய்ந்தே
பெற்றண்டமெனவிலகி யெவ்வளமும்பெற்றண்டமென்னநின்றே
பொற்றண்டைக்காலினொளிர்நற்றண்டபாணிதனைப்போற்றினனே(௧௨)

வருவருடமோவாத பொழிலிலகுமயிற்கிரியாய்வலுநோன்பண்ட
ரொருவருடவரையகலா தியற்றியரவிந்தமலருவப்பின்மேவுந் [ந்
திருவருடெங்கழலிணையான்றிசைமுகக்கானிவர்துதிக்குஞ்செவ்வேளாகு
குருவருடனகங்கருதி விழிபனிப்பவரிபதுதிகூறிநின்றான்* *(௧௩)*

பொன்வரையின்கன்னியருள் புதல்வனையவ்வரைவடிவன்போற்றிசிறப்ப
மின்வரையிற்புணர்தனமாரிருவரையுமருகில்வைத்தவேலோன்போந்து
தென்வரையினகத்தியற்கு மறைப்பொருள்சொற்றிருவாயைத்திறந்து
நின்வரையிலருந்தவத்தின்மிகமகிழ்ந்தாமினையடிமைநிலவக்கொண் [டாம்* (௧௪)

பொறிகலங்குசிறைவிரித்து வலிமிகுந்தமயிலுருவாய்ப்பொருந்திநந்த
நறியமலர்த்தாளடைந்தி யெனுமளவிலெவ்வாறேனன்னணிசிறப்ப
கறையகலமயிலிவர்ந்தோராறுமுகமுமீராறுகமலக்கண்ணும்
முறுவலிகொளொருபனிரு புயவெழிலுமிருபதமுமொளிரநின்றே(௧௫)

அம்மயிலினுருவாகுந் தூயன்மன்முகமதனையன்பாய்நோக்கி
யிம்மையினப்பானினக்கு வேண்டுவரமவிழுதியெனவெண்ணம்போலச்
செம்மையுறநாமளிப்ப மெனக்கருணையமாருள்செவ்வேளென்றன்
மும்மைமலமறுத்தினிய மெய்ம்மைநலந்தெரிந்தருளு முதல்வன்சொற் [றான் *

(வேறு)

கூர்வேலேந்துங்கரதலத்தெங் குரிசின்மொழிந்தமாற்றமதைக்
கார்வாங்கலைக்கண்டகவுமசுங்கவிமாமயிலாகியருள்
சீர்வாய்த்ததுவின்றெனக்கென்று சித்தந்தளித்துமயிர்பொடிப்பப்
பேர்வாய்த்திடுநற்றுதிகள்பல பேசிபணிந்துபகருவனால்* *(௧௭)*

கரிமாமகளைமருவுமருட் கடலேயின்றன்னாயிலினையைப்
பரிமாமயிலிற்றாங்கிநின்றும் பரிசாப்பெற்றேன்சலனமற்றே
னிருபாலெனையாட்கொண்டருளே யிபமாசிலென்னமிசைத்
தொருபாலிந்நன்மலையுருவா யுறையவேண்டுங்கற்பமுமே* *(௧௮)*

கற்பாகற்பமுடிவின்றிக் கழறுமயிலை மலையென்றே
கற்போர்விசாங்கக்கீர்த்திபெற்று காதாரின்றன் மாதருடன்
பொற்பாயமர்க்கேயடியர்குழாம் போற்றநாளும்வரநல்கி
நிற்பாயுமையாலாவென்று னீலமயிலாய்நிலைநின்றான்* *(௩௯)*

அறைந்தமாற்றமலையெறிந்த வயிலோன்கேட்டேயவ்வணமே
நிறைந்தமயிலைமலையுருவாய் நின்றனைமிசைநிங்கிருக்கிற்
குறைந்தமதிவேணிப்பெருமான் கொடுத்தசாபமகல்வதற்கா
வுறைந்திம்மலையிற்றவஞ்செய்வா னுறுவான்சங்கு கன்னனென்போன்*

அன்னவன்றன்றவவலிக்கா யன்புகூர்ந்தங்கரன்முனிவான்
மன்னுஞ்சாபந்தீர்த்தருள வருவாமிந்தமயிலைமலை
தன்னிலமர்ந்தநாண்முதலாய்த் தாணியோர்கட்கருளளித்து
நின்னதெணத்தையாமுடிப்பா நீயுட்கவனிங்குக்வென்றான்* (சக)*

விடவாயரவக்குழுநெளிய வீறும்பதத்தாலேறியெழிற்
படவாயிடத்தைக்கிழித்தெறியும் பசுமாமயிலின்மிசையேறித்
திடமார்கனகத்தடமேருச் சிலையான்வெள்ளிமலையடைந்தான்
கடலாம்பிறவியிடைவருந்தாக் கருணையருணங்குருபரனே* *(சஉ)*

அதனாலந்தமயிலைமலை யாழியேழுஞ்சூழ்புவியிற்
சதமாவதிந்துமதிவல்லோர் சதகாலிதயந்துதித்திடவற்
புதமாவிளங்குமச்கிரியிற் போயங்கதிர்வேற்சேயையினோந்
திதமார்னோன்பாற்றுறினெய்துமிதயங்கொண்டதெளிதென்றான் (சங)*

(வேறு)

தானவன்மயிலைப்பருப்பத மானதுந்தவமேயதும்
வானவன்பணிவேலவன்முனம் வந்துநல்லருடந்தது
மானமஞ்ஞையிவர்ந்ததுஞ்சில வாறிசைத்தனமிவையலா
லானவன்பொடுபாலசித்தனருந்தவச்செயலோதுவாம்(சச)

மயிலைமலைச்சருக்கம்.

முற்றிற்று

ஆ விருத்தம - உ௭௰



# மயூராசலபுராணம்.

நான்காவது
பாலசித்தர்
## தவச்சருக்கம்.

தண்டைகொண்ட தளிர்த்தொடைபூண்டுளான்
தண்டைசெய்பவர் தம்மைத்தடிந்திடத்
தண்டையங்கரந் தாங்கியமொய்ம்பினன்
தண்டையஞ்சபூற் சந்ததபோத்துவாம* (க)

என்றசூத முனிவரனின்னரு
ளின்றுபாலசித் தன்றவத்தூய்மையை
யன்றுணைமிசத் தாடதவததர்க்கே
யொன்றுமன்பி னுரைத்திடலாயினன்* (உ)

(வேறு.)

என்றியாழின்முனிவரனு மிசைத்துப்பின்னரவ்வுழியி
னின்றுவிடைகொண்டெழுந்தருளா நின்றனந்தமுனியுரைத்த
வன்றேமகிழ்கொண்டடியர்குழா மருகிற்சூழ்ந்துவரவெழுந்து
சென்றான்மயிலைமலைநோக்கிச் சீலமுயரும்பாலசித்தன்* (ங)

தேங்கும்பலவுஞ்சூதமுமுட் செறிமாதுளையுநரந்தமுந்தா
ரோங்குங்கமுகுங்கதலிகளு மொருங்குநெருங்குபொழில்சூழ்ந்த
பாங்குதோறுமுனிவர்குழாம் பயிலுந்தவச்சாலைகள்பலவா
யாங்காங்கமுதத்தடநிறைந்த வணிமாமயிலைமலைகண்டான் * (ச)

கணியாயுருவமெடுத்துமுனங் கன்னிவள்ளிதன்னைமணந்
தெணிவந்தடையுந்தொண்டர்குழு வெல்லாந்துலங்கக்கதியருளித்
தணியாவருள்கொண்டிலங்கியநந் தாயாஞ்சேயன்புடனமர
வணியார்ந்தொளிருமலைச்சார லார்ந்தவளங்கணோக்குவனால்* (ரு)

இடியேறொளிப்பவளிசலியா திருப்பவுறைஞயமாலுகலத்
தடியானதுவுஞ்சொலிப்படங்கத் தபனன்கிரணந்தனையெடுக்கப்
படியிலதிர்த்துமூச்செறிந்து பரவுமதநீர்சொரிந்திரண்டு
வடிவார்ந்தம்விழிகாட்டி மஞ்சையிகழ்குஞ்சரங்கண்டான்* (சு)

நமதுமரபிலொருபுலிக்கு நன்மையளித்தவொருமுதல்வன்
றமதுபொருட்சேய்வரிலன்னோன் றாளைவணங்கிக்கதிபெறுதற்
கமைதியுடனிங்குறைவமெனவண்ணுந்தகைபோற்குயவரிகள்
சுமதிபெறுமாமுனிவரைப்போற் றுன்னுமுழைகணோக்கினனால் *

காலையடக்கிப்பொறிபணத்தைக் காணாதடக்கியதிகரிக்கு
மாலையடக்கியறிவொண்ணா மாந்தர்தமமைவாயடக்கித்
தோலையடக்காதுதிர்த்துவளர் தூயதவஞ்செய்முனிவர்கடம்
பாலையடக்குமாசுணங்கள்பயிலுமழகைப்பார்த்தனனால் * (௮)

ஙங்களரிவைமணவாளர்க் கின்பந்தந்திவ்வுலகமுயத்
தங்கவிருத்துமலையிதுநீ சார்வாயென்றுநெறிகாட்டி
யங்கத்தினைசையிற்றனைமுன்னா வழைத்துக்கொடுபோவனபோல
வங்கப்பொறியசெங்கோட்ட வாமானினமுன்செலக்கண்டான் (௯)

கயிலைக்கிழவனருளிளஞ்சேய் கானக்கிழத்திமுலைதழுவிப்
பயிலுங்குமரனவுணனெனும் பரிமாமயிலையுகைத்ததனாற்
செயமெத்திறமோயாமெல்லாஞ் சேர்ந்திங்கணிததாயிருப்பமெனி
லயிலானிவர்வனெனவெண்ணி யகவுமயிலினினங்கண்டான் * (௰)

கொய்யும்புனத்திலஞ்சுகமேமுதலாங்குருகுகுழாங்குழீஇப்
பையமுதிருந்தினையருந்திப் பரிந்தங்ககன்றுபாரின்க
ணுய்யுமாறுதமைப்புரந்தார்க் குறுகணுறுங்காலொருவிவிடும்
வெய்யருரிமைபாராட்டும் வியப்பைக்காட்டக்கண்டனனால் *(௰௧)

முல்லைத்திணையிற்பலகாலு முதிருமமுதிற்குழலூதி
யெல்லைதோறும்போயுலவு மெழிலாரனிரையையொருங்காக்கிப்
புல்லார்வித்துட்புனல்காட்டிப் போற்றுமசோதைமகன்போலச்
செல்வப்பொதுவருறைந்திருக்குந் திருவைப்பார்த்தான்சித்தர்பி
[ரான் *

எங்கண்மருமான்சின்னாளி னெய்துவானிக்கிரித்தலத்தி
லங்கண்ணவுமருக்கனிநீழ லரியசுகந்தமிவையளிப்பான்
றுங்கவலாரியைந்தருவைச் சுவர்க்கமொரீஇக்கொணர்ந்திங்கன்
றங்கவிருவுந்தகைபோலத் தளிரார்தழைபூம்பொழில்கண்டான் *

முருகன்வருவாரணிம்மலைக்கு முப்போதினுமன்னோன்மார்பிற்
றெரியலாகவேண்டுமெனச் செழித்துமலரோங்கினவனைய
பருவுமதுவும்பொதிந்திருக்கும வனைக்கடம்புவரிபாட
வருகிறசெறிதல்சுருதியிலை யறியுமுளத்தனோக்கினனால்* (௰௪)

ஒருவர்க்கேனுமுதவாம லுண்ணுமற்றன் னுடல்வருந்தி
யரிதிலீட்டிவைத்துநிதி யங்ககப்புகுந்தோர்க்கீகுவார்போன்
மருமாமலர்தோறுங்கவர்ந்து வருந்தார்தம்மைக்கடிந்துமது
பெருகவீட்டியிழந்திடுமீ பேய்போலலைகின்றனகண்டான்* (௰௫)

கண்ணுற்றினையவளனைத்துங் கருதுமுள்ளங்களிகூர்ந்து
விண்ணுற்றண்டமேவுதலான் விண்ணோர்க்கணித்தாயவாபரவுந்
தண்ணுற்றிலகும்பொழிற்றோகைச்சைலப்பொலன்மாமுகட்டேறி
வண்ணக்கமலச்சுனையருகின் வந்தவ்விடத்தின்வளநோக்கி* (௰௬)

(வேறு)

ஆங்கணைச்சுனைநீராடி யரும்பொடிபூசியக்கந்
தாங்கினன்மலர்களாதி தான்கொடுபூசையாற்றி
நீங்கருபொழிலினுப்ப னெடுநிலாமணிக்கற்பாறைப்
பாங்கினிதமர்ந்துவைவேற் பரமனைப்பரவியேத்தி (௰௭)

வலமிடமெனுங்குறங்கின் மற்றைக்கான்மாறியேற்றி
நலனுறுபதுமமென்னு மாசனநண்ணியோர்கை
யிலகுறுமருமஞ்சேர்த்தி யிலகுமுகத்திரையோர்கையிற்
றுலங்குறவமர்ந்திலங்கு தாமலாக்கண்முகிழ்த்தே* (௰௮)

பயிலியமானன்றன்னைப் பரிதியொண்மதியிற்பண்பா
லியலுறமுறையிரேசித் தேற்புழிப்பூரித்துள்ள
மயலறக்கும்பித்தோங்கி வளர்தருமூலத்தீயை
யயமதிமண்டலத்தின் மூட்டியின்னமுதமார்ந்தே* (௰௯)

இன்னணம்பிராணயாம மியற்றியைந்தவத்தைநீங்கி
மன்னியமானனுள்ள மருவியகாட்சிதன்னிற்
றுன்னியபிரத்யாகாரந் தூயிதயாதியைந்தா
னன்னிலைபொருந்தவுள்ள நாட்டுதாரணைபுரிந்தும்* (௨௰)

இந்திரியாதிமாறுந் தத்துவச்சேட்டையெய்திப்
பந்தமாருடலினுற்றும் பற்றகலான்மாதன்னை
யந்தமாய்நோக்கவெய்திச் சமாதியுமினிதிறுற்றி
னந்தலிறனுவினன்மா னலம்பெறவினிதிருந்தும் * (உக)

வருபுறக்கரணமுள்ளா மாண்புறுகரணஞ்சேர்த்தி
யொருமையாமனத்தைத்தூயான் மாவினிலொடுக்கியின்ப
மருவுமான்மாவைமுத்தி வரதனுங்குமரனென்னும்
பரம்பொருட்கூட்டியின்பம் பயிறவயோகத்துற்றான் * (உஉ)

(வேறு.)

இன்னணமோர்மூப்பானைந்தாண்டுகாறு
மினியதவமுணவின்றியியற்றிநின்று
மன்னுமெழிற்குமரன்வராதிருப்பப்பின்னும்
வலியதவஞானவயிராகந்தன்னு
லன்னவனையுளச்சிறையிலடைத்தன்பாகு
மடற்கயிற்றாற்கட்டியிமைப்போதுமாறா
துன்னியுறநோக்கியழனுப்பணிந்தே
யொப்பரியதவம்புரிந்துமுறுமையாலே (உ௩)

பெருமானைக்குமரனையன்பாகமேவும்
பெண்மானைவனமானுட்களிக்குமுன்னம்
வருமானைக்குறவர்குலம்வளர்த்தமானை
வடிவெல்லாந்திரண்டுருவாய்வந்தமானைத்
திருமானைக்கலைமானையேவல்கொண்டு
திருவருள்செய்திடுமானையிடத்தில்வைத்து
மொருமானைக்கரத்தணிந்தோன்மருகியாகி
யுறைமானையுளமனையிலுவப்பவைத்தே (உ௪)

வானையொருகுடைநிழலிற்செங்கோலோச்சு
மகவானைக்கண்மணியாமகளைச்செந்தேன்

சோனையகமலர்த்துமருமகளையெம்பெம்
மானையொருகுருபரனைவன்சப்பொற்பூ
மானைமணந்தோற்குமருமகனை வேற்கை
யானைமணமகிழ்த்துமின்பவமுதைத்தெய்வ
யானைதனையுளமெனுஞ்சேவகத்திருத்தி (உரு)

இருகரமுந்துவாதசாந்தத்தின்மேலே
யேற்றியிருநிலத்திடைக்காலங்குட்டத்தை
மருவகிறீஇக்கண்ணுறுகும்புலத்திறசற்றும்
வந்தடையாதிமையிரண்டுமலர்த்தியுள்ள
மொருமையதாப்புறகலனிலொடுகெகிழலத்
துறுங்கனலைமதித்தலத்திலோங்கமுட்டிக
குருபரனுங்குமரனுக்காருயிராமர்தக்
கோதையனைக்குறித்தரியதவமபுரிந்தான் (உகா)

அரியுருகவயனுருகமகவான்வானு
ரண்டர்களெலாமுருகவருக்கன்சோமன்
றெரியுமழன்முதலியவைம்பூதம்யாவுஞ்
சித்தமெலாமொத்துருகத்திங்கள்சூடிங்
கரியுருகக்கணங்களெலா முருகவைவேற
கந்தனுளமுருகாதவிந்தைதன்னைத்
தெரியும்வள்ளிநாயகியாளுருகியெம்மான்
றிருச்செவியெலாமுருகச்செப்பலுற்றாள் (உஎ)*

(வேறு.)

இன்னல்செயுமவுணர்சமர்க் காற்றாதுகற்பகநா டிழந்துவானோர் [த்தப்
மன்னவன்மண் ணுலகினிடை வேணுவனந்தனிற்புகுந்துமலர்த்தாளே
பொன்னுலகந்தனையளித்திந் த்ராணிதிருமங்கலத்தைப் பூணச்செய்த
பின்னவிருமிலைவடிவேற் சுமந்தமலர்க்கரத்தானே விண்ணோர்கோவே.

பதினறுகலைமதியை யோராறுமுகமதியாற் பழித்தவேந்தே
விதினுறுமலர்முடிக ளொருநான்கும்பொறிகலங்க விசைந்துகுட்டி
யதினுறுவலையெறியுஞ் சடைப்பரனுக்கோம்பொருளையருளுங்கோவே
வதினறுங்கமலவெழி லழித்திடும்பொன்னடிக்கமலவாழ்வேபோற்றி*

என்னவருந்துதிநவின்று தேவர்சேனபதியை யினிதுநோக்கி
மின்னுலவுஞ்செங்கதிர்வேற் கரத்தோனேகைலைமலை மேவுஞ்சங்கு
கன்னன் மயிலோங்கறனி னமைக்குறித்தங்கரியதவங் கடினமாகப்
பன்னெடுநாளாய்வருந்தியுஞற்றுகின்றனனதனற்பரிவுகூர்ந்தே (கூ௰)

அம்மயிலைக்கிரியிடைநா மெய்தியவனுளவிருப்பையளித்தல்வேண்டுஞ்
செம்மையொடுமெனக்குறவர் மடமானங்குரைத்திடவச் செவ்வேள்கூறுங்
கொம்மைமுலையுமைபாக னன்னவன்பாலபசாரங் குறித்துமுன்னம்
வெம்மையினிற்றருஞ்சாபத்தானரனைப்புவியினிடைமேவினுறேல் (௱௧)

சங்கரன்றனனுமதிக்கு முரணாகவம்மயிலைச்சயிலத்தேகி
யங்கவனுக்கருளன்முறை யன்றெனமேனிகழ்வெண்ணியண்ணல்கூற
மங்கைசிகாமணியணங்கு மாநிதியாங்குறவர்குல மடமான்பின்னுஞ்
செங்கமலக்கரங்குவித்துப் பதந்தொழுதுவுரிமையுடன் செப்பாநிற்கும்

எவ்வண்ணங்கொடுஞ்சாப மெய்தினனுயினுநம்மை யினிதிற்போற்றி
யொவ்வரியதவமியற்றி வருந்தலுற்றானதலின்மிக் குவகையெய்தி
யெவ்வமிலாதவன்பரித்த சாபமின்றேசென்றகற்றி யினிமைசெய்தல்
செவ்விதெனவுரைத்துமுளத் தன்பினெடுமெந்தை சிந்தைசெய்யான்
[போல

நங்காய்நீநவின்மாற்றந் தக்கதன்றுநாமதனைநயவோநீமற்
றிங்கினிமேற்பகரலெென வுரைத்துமொருவிளையாட்டினெந்தாய்பின்னு
மங்கலமாமதந்தமொழிகூறியுளங்களிசெய்தும் வருந்திப்பல்கால்
சங்குகன்னற்கருஞ்சாபந்தவிர்த்தருளவேண்டுமெனச்சாற்றினின்றாள்*

அண்டமெலாந்தன்றருளாற் கண்டவனையாரணத்துக் கப்பாலானைப்
பண்டென்னைப்பாலனைப் பயந்தருமைசெய்தானைப் பரமன்றன்னைக்
கண்டநிலையிற்களங்கம் கண்டுவிண்டாதியர்களையாங் கண்ணுற்காண
மண்டைதநில்வைத்தானைமனம்வருந்தவைத்தானை மதிவைத்தாயால்*

ஆனதனனமதருநினில்லாதிங்ககறியென வண்ணல்சீற்றந்
தானடைந்துநவிலவதை மானறிந்தவ்விடையகன்று தருதெய்வானைத்
தேனையுந்தன்னேடுவரும்பான்மைசெயவிருவோருந் திகழ்வளஞ்சேர்
மானமயிலைக்கிரியிற் றவம்புரியுஞ்சித்தனிடம வாங்கினந்தார்* (௱௬)

(வேறு.)

சித்தன்மயிலைவெற்பினிடைச் சிவன்மாமகனையுள்ளத்தின்
புய்த்துப்புரிந்ததவமுரைத்தாமுயர்வாமயிலைப்பொருப்பினிடைத்
தத்தையனையமொழிவள்ளி தந்திமகிழும்பைந்தொடியோ
டொத்துமுருகற்கிதமுரைத்து முருதால்வருவதுரைப்பாமே

தவச்சருக்கம்

ஆ விருத்தம் - ௱௰௭.



# மயூராசலபுராணம்.

ஐந்தாவது,

## தரிசனச்சருக்கம்.



கொங்கையாகிய கிண்ணமும் வண்ணமென்கொவ்வையஞ்செவ்வாயிற்
றங்குமாரமிர் துங்குவளைக்கணிற் றங்குமாரருட்டேனு
பொங்களன்னையாம் வள்ளிநாயகியிடத் தேற்பதற்கன்பாகத்
துங்கவேனலஞ் சாரலிற்றிரியும்வே டனையடிமறவேனே* (க)

(வேறு.)

இன்னவண்ண மியன்றசித்தன்றவம்
பன்னுமாதவச் சூதனைப்பார்த்தெழி
றுன்னுநைமிசத் தூமறையந்தணா
பின்னிகழ்ந்தமைபேசெனப்பேசுவான் (உ)

(*வேறு*)

காதுலாவுமிருகண்களுலாவக் கண்டுலாவுமிளமானெழில்கான
மீதுலாவுமடவோதிமமுற்றும் மேவிவந்துகதியின்றிறநாடித்
தாதுலாவுமலர்வாவியுலாவுந் தகையுலாவுதணிநடையினுலாவிச்
சூதுலாவுநகின்மாதிருவோருஞ் சுபமுலாவுமனதோடுநடந்தார்* (ங)

விலைவருந்திறமருந்தவநாளு நெஞ்சகங்கொடுவருந்திநெகிழ்ந்தம்
மலைவருந்துநெறியின்றவன்மாடேமயில்வருந்துமிகுசாயலினல்வன்
சிலைவருந்துநுதலாரிருவோருந் திகழிளம்பிடிகணடையின்வருந்தக்
கலைவருந்தியுணர்வோரும்வருந்தக்கால்வருந்தியதர்மேயினரன்றே (ச)

கனிநெருங்குசினையிற்சிறைமேவுங்காநெருங்குபறவைக்குலமெல்லாந்
தனிநெருங்குவனமீதுபசந்தத் தளிரொடும்பரிசுதூவிநெருங்கப்
பணிநெருங்குகுரன்மேயினகின்னைப் பண்ணெருங்கமுழையாமலைபார
ரினிநெருங்குமெனவேமயிலைப்பேரிலகிடுங்கிரிநெருங்கவணைந்தார் (ரு)

கண்டுகண்டுமுனிபத்தினிமாருங் கானகத்தில்வளர்கன்னிகையாரு
மண்டொறுத்தமகிமைப்பெறுகுரு மங்குதங்கிவளர்மற் றுளபேருந்
தண்டனிட்டடிபணிந்துவழுத்தித் தங்கள்கண்குளிரநாடினரேக
வண்டுகிண்டிமதுவுண்டகடம்பன்மங்கைமாரிருவருங் கிரிகண்டார் (௬)

மாவினிற்குயிலெலாமிவர்தம்மை வாவெனும்பரிசுகூவிடவன்பர்
நாவினிற்றுதிசெயும்பரிசென்ன நாதமாரளிகளிசைமிசைப்பக்
காவினிற்குலவுமன்னவர்சாயல் கண்டுதுன்றுசிறைமஞ்ஞையயிர்க்கப்
பூவினிற்பொலிபொதும்பருலாவப் பொற்புலாவுமலைமீதிலிவர்ந்தா

அஞ்சலித்துமுடியேறியகையு மரியசித்தனதுநீறணிமெய்யும்
விஞ்சிவிஞ்சிவிழியூறியநீரும் வெந்தணற்கொடியின்மாறியசீரு
நெஞ்சினிற்படியயின்றிடுவீறு நிச்சயித்துவகையம்புனன்மீறும்
வஞ்சிவள்ளிதெய்வானைமினொடு மனமகிழ்ந்ததிசயித்துளாயாடி * (௮)

முத்தையொத்தமணிமூரலுநீருண் முகிலையொத்தளிகணிறைகுழலேரு
தத்தையொத்தமுதமூறியசொல்லுஞ் சாருநற்புருவமாமிருவில்லுங் [ங்
கொத்தையொத்திடுபயோதரமெய்யுங் கொண்டிளம்படிவமாயருள்செ
சித்தகன்னிகையராய்மயிலேறுந்தேவனுக்குரியதேவியர்நின்றார் * [ய்யுஞ்

சித்தனுக்கெதிர்நின்றிடுமாதர் திவ்யநல்லுருவைநாடிவியந்தே
யித்தகைக்கொளிவரோமுருகன்ற னினியதேவியர்களென்றுநினைத்துப்
பத்தியோடவர்கள்பாதமிறைஞ்சிப் பன்மலர்த்திரளகமேவிவணங்கி
வித்தகத்தரியநீவிரியாவர் மேயகாரணமெனோதுமினென்றான் * (௯)

அந்தநல்லுரையையெந்தமையாளு மன்னைமாரிருவருஞ்செவிகேளா
வந்தவன்பதிகரித்துயர்சிந்தன் மாமுகத்தையினிதாயெதிர்நாடி
யெந்தைமார்களுயர்சித்தர்களிங்ங னெய்துவார்களெனவுள்ளமுவந்தே
விந்தையாகவுறையுஞ்செயலுன்னிமேவினங்கனிவிலென்னவிளம்பா

அன்னைதந்தையர்கள்போலவிரும்பி யாதரித்திடுவையென்னவியந்தே
மன்னுமெய்த்தவமியற்றியசீரான் மங்கைமாரிருவருங்களியெய்தி
யின்னிலைக்கணெனையாடருமாறே யின்றுவந்ததெனமன்றவுணர்ந்து
சொன்னவாசகமறுக்கிலனும்பா றொண்டுசெய்குவலெனத்துதிசெய்
[தான் *

அற்றைநாண் முதலாயிருவோர்க்கு மந்தமாமயிலைநற்கிரிதன்னிற்
கற்றுணர்ந்தவெறிமின்றிடுசிததன் கனியுநீர்மையுபசாரமதாக
நற்கனிக்குவைகிழங்குகளாதி நாடொறுந்தவறிடாதுகொணர்ந்து
சிற்றடிக்கணவைவைத்துவணங்கத் திவ்யநல்லமுதுசெய்துமகிழ்ந்
தார் (௧௩)

வள்ளிநாயகியெனும்மடமானும் வானநாயகியெனுங்கனிதேனும்
விள்ளொணாவுவகைவெள்ளமமுழ்ந்தி விச்வகனபனவண்மேவினநதே
தெள்ளியோர்பரவுமம்மகமேருச சிகரநீண்முடிகளொன்றுவிடபின்
வெள்ளைமேகவுருவெள்கிடும்வண்ணம் வேளவியப்பவொருமாளிகை
யோடும (௧௪)

சூளிகைப்பயிலுயிர்த்தவரங்கந் துப்புணற்குரியதாகியவில்லந்
தானுலாவிவருதற்கொருகூடந் தன்னையுமுனபுதருகென்னவியங்கே
கோனுலாவிவருமாறுயர்வாகக் குலவுமாமணிகுயிற்றிவிளங்க
நாளுநாளுமிவைகிலவுறுமாறு நற்சிருட்டியியற்றினனம்மா (௧௫)

அந்தமாலுபரிகைத்தலமீதே யரிவைவள்ளிதெய்வானையெனும்பே [ந்
ொந்தமன்னையர்களன்பினிவதிந்தே யேழ்புவிக்குநலனெய்துறுவண்ண
தந்தையென்றநகுகின்றிடுசிந்தன் றன்முகத்தைநனியன்பொடுநோக்
யிந்தமாளிகையிலீசனயன்மாலியாவராயினுமுறாதுதடுத்தே (௧௬) [இ

காவல்கொண்டமர்கவென்றதிகாரங் கருணையோடினியகட்டுரைகூற
வாவலாயதனைமேற்கொடுசித்த னத்திறம்புரிவனென்றுகளிப்பா
யோவிலாமலிரவும்பகலும்மவ்வுபரிகைக்கெதிர் துவாரமிலைக்கண்
மூவராயினும்விடாதுதடுப்ப முன்னினன்பதியகின்றனனன்றே (௧௭)

காலைமாலையுச்சிப்பொழுதென்னக்கழறும்வேளைகடொறுங்கனிவாயப்
பாலசித்தனறுமென்கனிமுதல பரிவினல்கினனருத்துபகாபபச்
சீலமிக்குமகிழ்வோடெழில்வள்ளி தெய்வயானையெனுமாதிருவோரு
சோலைபரிருமயிலைம்மலைமீதே துன்னிவகியயினேயொ நாளில். [ஞ்

வேறு.

வெள்ளியங்கிரி மேவியிருப்பவன்
புள்ளிமாமயி லூர்ந்திடுபுங்கவன்
வள்ளியானை மணாளன்களங்கிளாத்
தெள்ளியோருள மேடஞ்செய்பவன் (௧௯)

பந்தமுற்றும் பறித்தருள்செய்பவ
னெந்தையாகவந் தெந்தமையாளபவன்
கந்தமொய்க்குங் கடம்பணிதிண்புயன்
முந்துசஞ்சித முற்றுமகற்றுவோன் (௨௰)

சத்தியத்தலை நின்றதயாபரன்
சத்திவித்தையில் வைத்தசமர்த்தினன்
சத்திமுத்தந் தருமெழிறபுத்திரன்
சத்திதந்தெமை யாடருந்தறபரனை (௨௧)

நங்களங்க நலியக்கடிந்தவன்
செங்களத்தி னசுரரைச்செற்றவ
னங்களங்க மரியபெண்ணைகயி றான்
மங்களங்கவி மாலையணிபவன் (௨௨)

முக்கணக்கற்கு மூலமுளைத்தவன்
பக்குவத்தினர் பக்கலினிற்பவ
னிக்குவிற்கொ ளிரதிமணாளனுஞ்
சொக்குமெட்டெழி லேந்தியசுந்தரன் (௨௩)

உதயசெங்கதி ரொத்தவொளியின
னிதயசெங்கம லத்தினிப்பேய்ந்தவன்
சிதைவுமூல மலந்தெறுசிற்குணன்
சுதையெனத்திரு நீறணிசோதியன் (௨௪)

சித்தியெட்டையுஞ் சித்தர்க்கருள்பவ
னத்திமாமுக னன்புறுசோதரன்
முத்தியீந்தருள் மோனபராபர
னித்தியன்னிம லன்னிகரற்றவன் (௨௫)

ஒருதரந்துதி செய்யினுமோங்கருள்
கருதரங்கபொன் றென்னக்கனிந்தவன்
பொருதரம்பயி லாப்பணைபூண்டுளான்
நிருதரங்க நிலைக்கரியானவன் (௨௬)

வந்தசென்மம் வராமலளிப்பவன்
கந்தநாறுங் கமலத்துறைபவ
னெந்தையென்றடி யேததிடக்கூட்டிடுஞ்
சந்தனப்புய மாஞ்சயிலத்தினன் (௨௭)

கருத்திருத்திவைக் கும்படிகாதலைப்
பொருததிவிட்டவன் பொங்குப்புகழினன்
வருத்தமுற்று மகற்றிடுமைந்துளான்
பருத்தமாமயி லேறிடும்பார்த்திபன் (௨௮)

இவ்வணம்புகழ் தங்கியவெந்தைதான்
செவ்விதேக்குயர் வள்ளிதெய்வானையாங்
கொவ்வைவாயிளங் கோதையர்காதலா
லெவ்வமாறுமுன் மத்தமதெய்தியே (௨௯)

வெள்ளிவெற்பிடை நின்றுநம்மெல்லிய
வொள்ளியெங்ஙன மேகினளொன்றுள
முள்ளியங்க ணொருவிளையாட்டுறீஇ
வள்ளறேடி வருந்திவருவனால் (௩௰)

மாயவன்பதி யேகவம்மாதவன்
றூயவன்பிற றுலங்கியெதிர்கொளீஇச்
சேயிவண்செலுஞ் செயதியென்றெவெனத்
தாயினென்னை யளித்தவன்சாற்றுவான் (௩௧)

கானகத்திற் கிடைத்திடுகன்னியும்
வானகத்திடை வந்திடுபொன்னியும
போனதிக்கையிப் போதுபுகலென
யானறிந்தில னென்றிசைத்தானரோ (௩௨)

வேதன்வாழிட மேவினனங்கவன்
பாததாமரை சூடிப்பழிச்சியெந்
நாதனேவந்த தென்னெனநம்முயிர்
மாதரார்க்குவந்தனரோவென்றான் (௩௩)

மானவேடர் வளர்த்திடுமென்னையும்
வானநாட னளித்தமடந்தையும்
யானுமுய்வதற் கண்ணுவரோவெனாத்
தேனலம்புறு சேவடிபோற்றினான் (௩௪)

அந்தரந்தனி லேகினனங்குறை
யிந்திரன்மல ரேந்தியெதிருறீஇ
வந்தடித்தல மன்னியிங்கெய்தினை
தெந்தவண்ண மிசைத்தருள்கென்றிட (௩௫)

மானளித்திடு மானுமோர்தெய்வத
யானைதந்தரு ளானையுமிங்ஙனம்
போனவோவெனப்போகியும்போனதை
யானறிந்தில னென்னவிறைஞ்சினான் (௩௬)

ஆதவன்பதி யண்ணினனங்கவன்
பாததாமரை சூடியிப்பக்கலி
னாதனையெய்தும் வண்ணநவிலெனத்
தாதையாமெனை யாள்பவன்சாற்றுவான் (௩௭)

குறவர்தங்குல தீபமுங்கோவினுக்
கிறைவர்தங்குல மேத்தருஞ்செல்வியு
முறுதலிங்ஙன முண்டெனிற்கூறென
வறிகிலேனென் றவனடிவீழ்ந்தனன் (௩௮)

இந்துவின்றல மெய்தினனங்கவன்
வந்தருச்சனை மாண்பினியற்றியே
சிந்தையாலுந் தெளிவருஞ்சோதிநீ
யெந்தவண்ணமிங் கெய்தியதென்றனன் (௩௯)

உன்னைவேணியில் வைத்தவனெண்கர
மன்னவைத்திடு மானினமானையும்
பொன்னிலத்தர சன்றருபொன்னையு
முன்னியென்ன வவனுறவில்லென்றான் (௪௰)

இன்னணம்பல தேவரிருப்பெலாங்
கன்னிதந்தருட் காதலனடியே
துன்னுமாழ்கடற் சூழ்கருமையகந்
தன்னில்வந்தனன் றுயெனவந்தவன் (௬௧)

பத்ரபீடநே பாளம்பிரமாண்டமுஞ்
சித்ரகூடச்சிர மஞ்சிவலோகமே
முக்தமா* ரவிமுத்தங்கங்காநதி
நற்றுவாரந்னா நாசிமாநைமிசம் (௬௨)

மந்தரக்கிரி வாரிசமாலவரை
யங்கரத்துய ராடாலக்கிரி
சந்த்ரகூனஞ் சுமிந்திரமோடய
வந்திசொன்ன மலையொடிராவதி (௬௩)

குல்லையின்பெயர் கொண்டெழிலார்வன
மெல்லிசாரதை மேவியிருப்பிடஞ்
செல்லுதற்கரி காஞ்சிகண்டம்மொளிர்
சொல்லொணைப்புகழ் சூலவரையுடன் (௬௪)

ஸ்ரீசைலம் - திருக்கோகர்ணம்

மடல்மலர்ச்சுனை மல்குபருப்பத
முடியைக்கண்டவர் மூளுமபிறவிதீர்த்
தடருமோககந்தந் தாண்மல்லிகார்ச்சுன
மடலகம்பத்த னைசைத்திளைநற்றலம் (௬௫)

திருவாலங்காடு

முஞ்சிகேசியு முன்பொருநாகமு
நெஞ்சநெக்கு நினைந்தவசங்கொள
வஞ்சிநீலியு ணமருவவு
நஞ்சிவன்னட னம்புரிநற்றலம் (௬௬)

திருவொற்றியூர் - திருமுல்லைவாயில்

ஐந்தருக்குழு வங்கண்மகிழதாய்
வந்தருந்தவ மாற்றியமாசல
முந்தைமுல்லைச செடியினமுளைத்தெழுந்
சுந்தரத்திற் சொலித்திருக்குந்தலம் (௬௭)

---

* அவிமுத்தம் - காசி

திருவச்சிறுபாக்கம் - திருமாற்பேறு

ஆறணிச்சடி லன்னெனமயான்பவ
னேறுதேரச் சிறுத்தியகற்றலந்
தேறுமாயன் றிகிரியைத்தாங்கிடப்
பேறளித்துப் பிறங்கியமாதலம் (௪அ)

காஞ்சிபுரம் - திருவண்ணாமலை

நாகமீன்றநன் னரியிருந்தரு
யோகபூசை யுஞற்றியநற்றல
போகவண்ணனும வேதனுங்காணருஞ்
சோகந்தீர்க்குநற் சோணகிரித்தலம (௪௯)

திருக்காளத்தி - திருக்குறுக்கை

பையராவும் பகடுமரண்கொடு
செய்தபூசையிற் சித்திபெறுந்தல
மையனென்றுணராமலலர்க்கணை
யெய்தவேளை யெரித்தபெருந்தலம் (௫௰)

திருக்கழுக்குன்றம-திருப்பெருந்துறை-திருக்கோவலூர்

அந்தரத்துய ராரணமாமலை
யெந்தையார்முனி வோர்களுக்கேமறைச்
சந்தைவைகுதனாறு சாற்றியமெய்த்தல
மந்தகாசுர ஞ்சியடுதலம (௫௧)

திருவிரிஞ்சை சீர்காழி *

மாணிபர்ச்சனை பண்ணுமுடிவிலாந்
தாணியின்றெழி லுமறிடுமெய்த்தலங்
காணிவிட்டயனை முன்னொகழிடத்
தோணிவிட்ட துலக்கமுறுதலம் (௫௨)

திருவதிகை - மாயூரம்

தம்மைபிந்தை செயுந்தருக்கேய்புரம்
வெம்மையாக நகைத்தவிழுத்தல
மம்மைமுன்மயி லாகவருந்தவ
மெய்ம்மையாள வியற்றியமெய்த்தலம் (௫௩)

விருத்தாசலம் - திருக்கண்டியூர் - திருவிற்குடி

விதரகன்விட சித்துக்கநடர
வத்தனொவளர் வன்னிபடித்தலஞ்
சுத்தர்ஞார்சிரங் கொயதிட்ட தூய்தலஞ்
சத்தியபமிற் சலந்தரனைக்காய்தலம் (௫௪)

திருச்செங்கோடு-திருவஞ்சைக்களம்-திருவானைக்கா-மதுரை

வாசமாமலர் மாடச்செங்குன்றமே
மாசுதீர்த்திடு வஞ்சைக்களத்தல
மாசிலாச்கரி யன்புசெய்தற்றல
மீசனூர சாளுமெழிற்றலம் (ருரு)

திருப்பூவணம்

பூவணத்துறும் பொன்னனையாண்முன
மாவனத்தில் வருத்தவானுரு
வாவலிற்கிள்ளி முத்தமளித்தலைத்
தூவணத்திற் றுதைந்தெழிலுந்தலம் (ருசு)

திருநெல்வேலி - திருச்சிராப்பள்ளி

பேயுந்தண்முகி லிற்பிறழாவிதங்
காயுஞ்செந்நெலைக் காத்ததிருத்தலந்
தாயுமாகி யரிவையைத்தாங்கிய
நேயநம்பரன் நேசித்துறுந்தலம் (ருஎ)

திருக்கோணமலை - வேதாரணியம் - திருவாரூர்

சீரிஞர்கயி லாயத்திருமுடி
நீரிஞன்மறை பூசைநிகழ்தலந்
தேரிஞற்சிறந் தேதிருவேத்திய
பேரிஞற்றுதி யேறும்பெருந்தலம் (ருஅ)

திருவைகாவூர் - திருவழுவூர்

இடபமெய்யுறு மெந்தைக்குத்தன்னுரு
வடைவுடன்பர னன்றருணற்றலந்
கடகரக்கரி காய்ந்தேயுரித்தணி
யடன்மிகுந்தே யழகுலவுந்தலம் (ருகூ)

திருப்பறியலூர் - திருக்கடவூர்

அக்கணிந்தவ னன்றுமகஞ்செயுந்
தக்கனங்கந்தடிந்தபெருந்தலம்
புக்கவேமன் புரண்டழப்பாதத்தா
லுக்கிரத்தி னுதைத்தவுயர்தலம் (சுய)

வைத்தீசுரன்கோயில்

தானவேதனுந் தாவுசடாயுவும்
வானவொண்கதி ரும்மலர்கைக்கொடு
பானலங்கண் டனைப்பணிந்தேத்திய
மேனிலாவி விளங்கியநற்றலம் (சுக)

# தரிசனச்சருக்கம்.

## சிதம்பரம்

உலகமேத்திநின் றுய்யவுமற்றவப்
புலியுஞானப்புயங்கமு நின்றெதிர்
மலி பகிட்சி மருவவும்பொன்மன்று
ணிலவுசோதி நிருத்தஞ்செய்தற்றலம் (௬௨)

இன்னதற்றல மேருசகியாவுமே
யன்னவாவி யகங்குனையாழ்தடந்
துன்னுமாநதி சுற்றுங்கிடங்குகன்
மன்னுங்கூவல் வளாகமு முழுதுமே (௬௩)

வானுலாவிய மாமலைச்சாரலுந்
தேனுலாவுஞ் செழுமலர்ப்பொங்கரு
மானுலாவு மநங்கடமுமாமிளை
மானுலாவும் வனத்தியவெளிகளும் (௬௪)

மாதவத்தினர் வைகிடசாலமுஞ்
சாதகத்தினர் தங்குமிடங்களு
மேகமற்ற விருடிகளின்புறு
மோதுமாதருலாவுமகங்களும (௬௫)

அஞ்சகங்க ளடருஞ்சினைகளு
மஞ்ஞைஞயாரும் வனத்தும்பொதும்பரு
மெஞ்சலின்றி யிளங்குமரன்வெனழில்
வஞ்சியார்தமை நாடிமயங்குவான் (௬௬)

என்றுயிர்க்குயிராகி யெயினரின்
றன்றுயிர்க்குயி ராயினைதந்திடு
மன்னமானுக்கு மாருயிராய்வள
ரன்னமேயெங் ககன்றனையென்றனன் (௬௭)

ஐந்தருக்க ளனுதினமும்பயி
றந்தநற்கிளி மயத்தலைதாயென்றன்
சிந்தைகொண்டெங்கு சென்றனையென்பதி
கொந்திடும்படி யென்றழுதுவன்றனன் (௬௮)

(வேறு.)

மலையாசலவின் றுலவும்வளிபோ
யலையார்தருமம் புனிவன்னகிலக்
கிலையாமெனவிங் கயிலாதமென்
கொலையேபுரியக் குலவாவணமே (சுசு)

மயிலன்னவர்மா முகவாணியிரா
வியலுமதியே யுனையேயெனநா
யயிலும்வண மெண்ணிவிழுங்குமரா
பயிலும்படிகால் பரிசேதுரையாய (எ0)

நந்தந்தொனிமுற் றிறுமேலியச்
சந்தம்பெறுதை யலாமேயினரென்
றுந்தம்மகி ழோவியகோரகைகாண்
முந்துந்திசையே மொழியீர்மொழியீர் (எக)

காட்டந்தனை நாளுநகைத்தெழிலால்
வாட்டஞ்செயுமங் கையரொய்தினரொன்
றோட்டஞ்செயுநல் லுழையீரவரைத்
தேட்டஞ்செயலுங்கடிறத்ததுவே (எஉ)

நஞ்சாயலை நாணவுலாவுமவர்
தஞ்சாயன் மறைந்ததெனத்தகையா
லெஞ்சாதிவ ணேபயிலும்மயில்காண்
மஞ்சார்குழன்மா தரைநாடுமினே (எங)

சொல்லிற்சுகமென் பதுதீரும்வணஞ்
சொல்லிப்புகழ்பெற் றவர்தூரமெனுச்
செல்வக்கிளவிப் பயிலுஞ்சிறையார்
செல்வக்கிளிகா ளவரைத்தெரிமின் (எச)

(*வேறு*)

தன்றன்பதியைப்பிரியாது சலசத்தலரிலுறுமனங்கா
ளொன்றிக்கலவியான்மகிழ்ந்தே யுறையுங்கருத்தையறிந்தனமான்
மன்றற்குழலார்நடைக்குடைந்து வதிந்தேமவரிங்ககன்றதனு
வின்றைக்குயர்ந்தோமென்றேவவ் விருவரிருக்குமிடம்புகல்வீர் (எரு)

உங்கள்வதனகசேரலமெலா மொன்ருய்த்திரடடியொளிகாட்டு
மங்கையாரைத்துறந்தமெனு மகிட்சியதனுன்மலர்ந்திருக்கும்
பங்கேருகங்காளிங்கவர்கள் படருந்திசையைப்பகர்மினின்றிச்
சங்கைவைத்திரொளிறும்மைத் தாவுமனாயென்றுரைப்பேமால் (௭௬)

மீனந்திரைசைவலங்குமுத மிளிருங்கமலம்வெண்முத்தம்
பானந்துயருஞ்செம்பவளம் பனிக்கண்கரங்கேசஞ்செவ்வா
யானனம்பற்கழுத்திதழ்க ளமைந்ததடமாமணங்கரசே
மானுங்கரியுங்கூடியிங்வன் வந்தமாற்றமறியாயோ (௭௭)

அருவித்திரளேமணிவடமா யணிகார்முகிலேமணிவாரா
யுருவத்துயர்ந்தெம்மட ந்தையர்பா லொளிருந்தடமாமுலைநிகர்த்தீர்
பருவத்தினிவிங்கெமைப்பிரிந்து படருமவர்வைகிடம்பார்த்துத்
தெரிவிப்பதற்கோவோங்கலெனத் திருநாமங்கொண்டெழுந்தீரோ (௭௮)

கும்பத்தலத்தினெழிலழிக்குங் கொங்கையாரை நீங்கினமென்
றும்பர்க்கறிவிபபதுபோல வுயரும்பணைக்கையெழில்காட்டிச்
சம்பமதநீர்விடுங்கரிகாள் சரமைந்துடனேவளர்களிற்றின்
றமபியெனவுங்குணர்ந்தவர்கள் சார்ந்தவிடம்பார்த்துரைப்பீரோ (௭௯)

எமதுமடவார்புக்கவிட மிவனென்றறிந்திங்குரையாம
லுமதுவலியையுளங்கருதி யுழல்வீராயினுண்புலிகா
ளமதுதாதைமுவிலேவே ளட்டிச்சிதைத்தங்குரித்திடுவான்
மமதையொழிமின்புல்லெனும்பேர் வையமொழியத்தரித்திரோ (௮௰)

கடத்திற்பயிலும்விலங்கெவைக்குங் கவின்சேரரசாய்விறல்பெற்றீர்
இடத்தினமதுசொற்கேளீர் தேவிமார்கள்பிரிந்துறைபு
மிடத்தைத்தெரிந்திங்குணர்த்திடுமி னின்றேலாலகாலமெனும்
விடத்தையயில்வோன்சரபமதாய் மேவியடுவான்காணீரோ (௮௧)

கருமாவெனும்பேர்தரித்திருக்குங் கானவிலங்கிரிதுகேளீ
ரொருமாமதுரைப்பதியதனு ளோரீராறுரோலமுமப்
பெருமான்வழுதியவையதனிற் பிறங்குமமைச்சத்தொழிலினராய்
வருமாறளித்தோன்சேயெமது மடந்தைமார்வைகிடந்தெசிப்பீர் (௮௨)

இன்னவண்ணஞ்சராசரங்க ளியாவுமிரங்கவினவினனு
லன்னமறியாத்தனிமுதலுக் கறியொணுத்தாரகப்பொருளைப்
பன்னுங்குரவனெவ்வுயிரும் பரிவாய்விளக்கப்பரித்திடுவோ
மன்னனவிளையாட்டோவறியே மினனற்கடவினைகளாகானன் (௮௩)*

(வேறு.)

தண்ணேயெனுமைக் குழருங்கியோளிர்
பெண்ணேயெனுமென் பிழைபெனுமிரு
கண்ணேயெனுமென் கனிவாணிலறபு
மெண்ணேயெனுமோர் திழையேயெனுமால் (௮௪)

கிளியேயெனுமென் கிளருட்கமலத்
தளியேயெனுமற் புதமாரமுதத்
துளியேயெனுமா மணியிற்றுனுல
லொளியேயெனுமோ வியமேயெனுமால் (௮௫)

மருவேயெனுமி யாவும்வழங்கிடுபைங்
தருவேயெனுமென் றனிநாடகமா
முருவேயெனுமுன் னுவதற்கரிதாங்
திருவேயெனுமென் செய்வேனெனுமால் (௮௬)

நிதியேயெனுமென் றுயர்நீக்குசுக
நதியேயெனுநற் கலையாயிரமார்
மதியேயெனும்வந் தெதிர்நிற்கவிது
ததியேயெனுமித் தகையேனெனுமால் (௮௭)

கானத்துயர்நற் குழலாயெனுமால்
கானத்துயர்கா ரிகையேயெனுமால்
மீனத்துயரும் விழியாயெனுமால்
வானத்துயர்மா தரசேயெனுமால் (அஅ)

(வேறு)

என்றுபலவாகமொழிந் திளங்குமரனின்புதரு
மன்றன்மலர்ச்சோலையுலா மாமயிலைப்பொருப்பினிடைச்
சென்றனனப்பருப்பதத்தின் செவ்வியெலாங்கண்களினு
லொன்றவியப்பொடுநோக்கியுவகையெனுங்கடற்படிந்தான்.

முத்தநகையார்வள்ளி தெய்வானைமுகங்காணச்
சித்தசன்றனெழிலழிக்குஞ் செவ்வேளிங்குற்றதனல்
வித்தகஞ்சேர்பாலசித்தன் வெஞ்சமஞ்செய்குதல்பாரா
தித்தருணமகல்வோமென் றெண்ணினன்போற்கதிர்மறைந்
[தான்.

(வேறு)

பொருந்தாவசுரருடற்குருதி பொருந்தவடிவேற்கினையாக்குங்
குருந்துமயிலைமலையடைந்த கொள்கையுரைத்தாமக்குமரன்
வருந்தாவையினிற்பாலசித்தன் மறிப்பச்சினந்தங்கருஞ்சமரம்
புரிந்தார்கதிர்வேலினைவிடுத்த புகழையினிதாப்புகலுவமே (கூக).

தரிசனச்சருக்கம்.

முற்றிற்று

ஆ-விருத்தம் - ௧௧அ.





௨

# மயூராசலபுராணம்

ஆறுவது.

## உயுத்தசருக்கம்

அன்னமுந்தரு மணிபலவுந்தரு மமரர்தம்போகமெலா
முன்னவுந்தரு மூதறிவுந்தரு முறையொடுமேழுலகோர்
மன்னிவாழ்த்திடும புகழ்தருந்தன்பத மருவினர்பின்னுமொரு
சன்மம்வேண்டிலுந் தருகிலாக்குருபரன் சரண்மலர்சிரம்வைப்பாம்.

(.வேறு.)

அகனமர்ந்தபாலசித்த னருந்தவத்திற்கிரங்கியருளன்னைமார்கள்
முகமலர்ந்தேயணித்தகனை மொழிந்தனைபின்னிகழ்ந்தகதை மொழிவாயெ
சகமனித்தம்பிரமசித்தமெனத்தேர்ந்தசவுனகாதியர்கள்கேட்ப[ன்று
புகலருஞ்சூதன்கனிவோடம்முனிவர்முகநோக்கிப்புகலாகின்றான். (௨)

(வேறு)

விரும்புமடியாருளமென்னும் வெற்பிலிவர்ந்தஞ்சலியாகு
மருப்புங்காந்தண்மலர்தோன்ற வானந்தத்தேன்மாரிசொரி
கருங்கொண்மூவாங்குமரனந்திக் காலைமயிலைமலைமுகட்டின்
வரும்போதரிவைமார்கள்பயின் மணிமாடத்தைநோக்கினான். (௩)

இம்மாளிகைமேலெனக்குயிரா யிலங்குமின்னாரிருப்பரெனி
லம்மாமுகங்கண்டுய்வலென வகிலமாளுமரசனைப்போற்
செம்மாந்தணிகேயூரமுடி செய்யமதாணிவெயில்விரிப்ப
வெம்மான்றனுவாளயிலேந்தி யிவர்ந்திட்டானம்மலைமீதே (௪)

காலவேடாவளர்த்தவெழிற் கன்னியுடனேகான்மருப்பி
யானைமகளுமுறைமாடத் தருகம்முருகன்வருங்காலைப்
பானற்களைத்தன்றருஞ்சாபப் பரிசான்முருகனென்றுணரா
தேனித்தலைமவந்தற்றான்கொ லென்றுச்சித்தனெண்ணுவரேல் (௫)

பொருந்தார்மதின்மூன்றையும் பொடித்தபோர்வெள்விடையானழற்
லெரிந்தவனங்கனுருத்தாங்கி யெய்தினனோவிந்திரன்றான் [கண்ணா
றரும்பாலகனைஞ்சயந்தனோடு சத்தசுரகீதங்களெலாந்
தெரிந்தவழகார்கந்தருவச் சேயோமாயமருவுருவோ (௬)

யாவனோவென் றுளமயங்கி யணிமாளிகையின் முகவாயிற்
காவல்புரியப் பாலசித்தன் கடிதினேகியாளையிங்கு
மேவனின்றிலெனவறைந்து தடுத்தான் வெயிலால் வருந்தியவ
ராவல்கூர்ந்துநீர்த்தடத்தை யடுகுங்காலைத் தடுப்பான்போல் (௭)*

சித்தனிவ்வா றெதிர்தடுத்துச் சென்றுவடிவேலேந்துசெங்கை
முத்தன்முகத்தை நோக்கியிந்த முழுமாளிகையிற் காவல்புரி
தத்தன்முதலோ ராணுகாம லண்ணுவேனிம் மாடமதிற்
சித்தமடவாரெனமக்காக்குந் திருநோக்கத்தாலமர்கின்றார் (௮)*

பின்னைநோக்குங்காலுலகா ணிருபன்றனைப்போலிருக்கின்ற
துன்னோடெதிர்த்துச்சமர்புரிவா ரொருவரிலையிக்கிரித்தலத்தின்
மன்னுமவர்கட வலிலக்கண் மாருதிருக்குமுனிவர்களாந்
தன்னைநிகர்த்தோருடன்பொருத றாணியாள்வோர்க்கறனன்றே (௯)

வாளும்வரிக்கட்டிறுகறுவும் வடிவேலுஞ்சேர்திருக்குமரற்
றோளும்பொலியநிற்கின்றாய் சொல்வதென்னோ மனுமுறையை
யாளுந்தன்மை மகத்திடையோர்ந் தகல்வாயெனவுவந்தற் கொருசொல்
வேளங்குனாயாதரிவையர்கள் விரகாக்கினியின் விறலதனால் (௰)*

அம்மாளிகையிற் செலச்செருக்கும் றணுதங்காலைப் பாலசித்த
னிம்மாநிலங்களுய்யவரு மேயுந்தாய்மாரிருவரையுஞ்
செம்மாமனதகிற்றருக்கலுந் தெரிவைமார்களொருதருவாய்
மெய்ம்மாதவு[illegible]மெடுத்துவிளம்புவராகில் (௰௧)*

அன்பின்றலைநின்றடிமைசெய்தே யருளின்றலைநின்றகிலத்தோர்க்
கின்பமளிக்கும்பாலசித்த னெனும்பேர்புனையுங்குணவானை
யுன்பங்கிருப்பமியாமுன்றன் னுளத்திற்றோன்றுங்கவலொழிந்தே
நின்பாற்கெதிர்க்குமாசனெனு சேர்த்துகவெம்போர்புரிகென்று (௰௨)*

(வேறு.)

அத்திரசத்திர வித்தையனைத்தையுடன் பாகச்
சித்தனுளத்தி லிருத்தியட றப்படை சிட்டித்தே
யத்தமளித்திர சக்கதவிகித்துமளித்தார்கள்
பத்தருளத்தி னினைத்தவிருப்புமயப்பழுதாமோ (௰௩)

அருளுடனீருவரு மருளியமொழிகேட்செவியுறுகாமுன்
றெருளியமனமொடு பலபல துதியுடனடிசேவித்
திருளறவொளிவிடு பல்படைகளுமுயிருதோளித்
தொருவெனவழகுறவரையபொருகவரியின் மிசைபோ
[னன்*

தனதரிவையருளியர தமிசைவருதலைகயோனை
வினையிரிதரவரு மறுமுகவிகலொடுமிகவேகதி
மனமதிலுயர்சின வனலுறவவனொடுவலியாக
வுனியமாசெயவொரு கிரியைவருமுவணமுளம்வை
[த்தான்*

அகமதிலுணவரு குபவினிலமுகுற வவனேறச்
சகலிருளறவொளி விடுகதிரவன்வெயிலுறுணைப்
பகைகொடுவ நதவசியுமவன்மிசைமுகில்பயமாகப்
புகைவிடுமனலுமிழ் கணையடர்விதமிகுமேயோர்செய்தா
[ன்*

அயனரியிமையவ ரசுரர்கண்முதலியரடர்போரி
லுயர்கொடியறமுடி யறவிடியெதிரர வெனவோடிப்
பயமடைவாகளல கிலேயிவனமதெதிர்படையேவிச்
சயமுறவதியிகல்புரிவதுமிகவதிசயமென்றே (௰௭)

புகலருமொருமுறையுறுமடிவெனுமொருபொருண்மிகுபோ
மகமுறவரனுயாசெவியிடை யருளியவணிவாயா [த
னிசலபெறுமசுரர்கண்முடிபொடிபடவயிலெறிதோ
றகைமலரி[illegible] [[illegible]

(வேறு)

காற்றெனுமொருகுலை கந்துகனையிட்
காற்றிசையுயிர்களு நகமுமெண்டிசைக்
கூற்றினைப்பரித்திடுங் குஞ்சரங்களு
மாற்றிடவணைந்தழ லாழியொத்தவே (௰௯)

பன்னகவாளியைப் பாலசித்தனு
மன்னிலைதனிற் சொரிந் ததனைநீக்கிட
வன்னியாம்பத்திரம் வள்ளலேவினு
னின்னில்வுயிரெலா மெரியச்சென்றதே (௨௰)

அம்பெனுமம்பினை யவன்விடுத்தழல்
வெம்பினையகற்றினன் வெகுண்டுபின்னரு
மெம்பிரான்மோகனத் திரத்தையேந்தியே
யும்பருய்வெருவுற வுடன்றுவிட்டனன் (௨௧)

சித்தனுஞானமாந் திறல்கொள்வாளியாற்
செற்றனனறுமுகன் செயிரதது நோக்கியே
வெற்றிகொண்மடங்கலாம விசிகம்விட் டனன்
மற்றதைச்சரபமாம வண்டின்மாற்றினன் (௨௨)

இன்னிலையறுமுக னேவுப்வெஞ்சரந்
தன்னையக்கணத்திடைச் சார்தராமலே
யன்னசித்தாதிப னக்றுங்காலையி
லென்னையாருடையவ னீதுசெய்குவான் (௨௩)

ஒவ்வொருபாணமு தன்னியுன்னியே
யிவ்வயினிவன்மிசை யெறிதறீதினிப்
பவ்வநீரருந்திய பயோதரமென
வெவ்வியவாசுகம் விடுதுமாலென (௨௪)

(வேறு)

ஆதவன்கணையிந்துவின்கணை யண்டர்தங்கணைகொண்டனோர்
மாதவன்கணைசீதமேவிய வருணனெண்கணையிவையெலா
நாதனெங்களையாளவந்திடு நாபசன்கதிர்வேலவன்
நீதில்சித்தனதுடலைமூடிபு சிந்தினான்வினைசிந்தினான் (௨௫)*

இந்தவாளிகளியாவுமாமழை யென்மெய்யினிலெங்கணும்
வந்தடர்ந்திடுவேலையிற்செயன் மாறிலெந்துபொய்தியே
பந்திகழ்ந்திடுமந்தனைதெழில் பரவுதேவியரிருவரைச்
சிந்தையிற்கமலத்திருத்தியே செயதனன்றுதிசெய்தவன் (௨௬)

(*வேறு*)

தெள்ளியமெய்ப்போதமுடன் பாலசித்தன்
சிந்திக்குந்தன்மையினைத்தெரிந்தன் பாக
வள்ளிதெய்வயானையெனத்திருப்பேர் தாங்கி
வந்தருளுங்கோதையர்கண் மழைபோற்றூவு
மொள்ளியநற்கணைகளெலாங்கணைநேரத்தி
லொப்பறுதஞ்சத்தியினுலொதுக்கியந்த
வள்ளலறுமுகன்மிகவுஞ்சோபங்கூர
வருத்தினுரவர்களன்றிமறுப்பரியாரே (௨௭)

தான்விடுத்தவாளியெலாம்புலப்படாமற்
றணந்ததுமக்கணைகளினுற்றனக்கிடாக
வானடுக்குஞ்சயந்தனத்தின்மிசையேநின்று
மழைபோலுந்தொடைசொரியுமாதவத்தோ
னானடுத்தமெய்யினுக்கோர்நவையிலாது
மும்பர்குழாமமபரத்திலொளிவேற்கந்தற்
கேனடுத்ததிவ்வணமென்றுரைக்குஞ்சொல்லு
மெக்தையறிந்தான்சினந்தானெழுந்ததம்மா (௨௮)

அலைகடலெலாஞ்சிவக்கவவுணமாதீ
ராமுலைத்தடஞ்சிவக்கவண்டத்தோங்கு
மலைமதிவாளுடுவெளியுஞ்சிவக்கச்சூரன்
மனதில்வயிரஞ்சிவக்கவடிவேலேவுந்
தலைமையுளோனென்றென்றுஞ்சிவக்கும்பாத
சரோருகத்தையடியேன்றன்றலைசிவக்க
நிலைமையின்வைத்தோனறுமுகஞ்சிவக்க
நெறியருளீராறுகண்ணுஞ்சிவந்தவன்றே (௨௯)

ஆதவனீதேதுவிபரீதமென்ன
வவனுறைமண்டலத்திடைநின்றப்பாலேற
மாதவன்வேதன்மகவானண்டவாணர்
வளர்பதத்தினின்றப்பால்வருந்தியேறத்
தீதகன்றவன்பர்துதிசெவியிலேறத்
தினமுமவர்தயசிங்காதனத்திலேறு
மேதமிலாம்புருவமெனுஞ்சிலையிரண்டு
மிருங்குளத்தில்வருஞ்சலத்தாலேறநின்றே (௩0)

மதிதவழுஞ்சடைமுடியான்வனத்தில்வாழு
மான்றமழுவுகரதலத்தான்வாமர்தனெரி
லதிகவிருப்பொடுதழுவும்பிராட்டிமுன்ன
மரும்பாலனெனததழுவியணைத்துமுத்தம்
புதியநறுங்கமலசெவ்வாயிற்றந்து
பொருதசுரர்குலமுழுதும்பொடிப்பாயென்று
நீதியெனமுன்பருள்சத்திவேலைக்கையா
னின்றுதழுவிப்பூசைசரியதியாற்றி (௯௧)

(வேறு)

அயிலைத்தருமுமையஞ்சிடவவளுக்கிடமதனைத்தரு
மரனஞ்சிடவவருக்கிடமாம்
வெயிலைத்தருகயிலைக்கிரிமிகவஞ்சிடவதனுக்கிட
மெனுமித்தரணியுமஞ்சிடவே
பயிலப்பணகமுமஞ்சிடநிலைபெறநிடுமிபமெட்டொடு
படமுற்றிடுமரவஞ்சிடவே
சயிலத்துறவர்களஞ்சிடவலையஞ்சிடவதனுள்ளுறை
தருமுத்தரவனலஞ்சிடவே (௯௨)

எச்சத்தியுமிதனுக்கெதிரிலையற்றிடுமெனவற்புத
மெய்திக்குருபரன்விட்டிடவே
யச்சிக்கணகளமட்கிடவனல்கக்கியவாயில்மற்றவ
மடுநற்கெதிரமையத்திடையே
கச்சைக்கிழிபடவுற்றெதிர்வெற்பைக்
கற்றக்கனதனவித்தகியார்
பச்சைப்பரிமளமொய்த்தமர் பத்மப்பதமலருட்கொ
பத்தித்துதிசெய்துற்றனனல் (௯௩) [டு

(வேறு)

திரைவேலைப்புனன்முழுதுங்கொதித்திடவண்டத்தலைவர்சித்தமெல்லாங்
கரைகாணத்துயர்வேலை மடுத்திடச்சித்தன்புரியுங் கடும்போர்வேலை
யுரைவேலையுணர்வடங்கப் படர்வேலையுயர்தவமேயுருவமாகிப்
பெருவேலைதனில்வந்தோன் பிடித்தனைமார்திருமுன்னர் பிறங்கவைத்
[தான்க

வள்ளிதெய்வயானையெனு மங்கைநல்லாரிருவர்களு மகிழ்ச்சிகூர்ந்தே
யொள்ளியவேலங்கரத்திற் பற்றினராயங்கிருப்ப வுமைபோத்தும
வள்ளலிஃதெனவேயிறும பூசனைத்தன் னுளமகிழ்வ வருந்தச்சேர்வுற்
றுள்ளவிலாக்கணங்கடமை யப்பநினைந்தானவையுமெந்தாந்தமமா (௬௫)

நின்றகணமுகநோக்கியிர்சித்தனோடமனை நீவிர்செய்ம்மி
னென்றனுமங்கவைபணிந்து வடிவாளசூலமயலகை யெழுமூன்றுக
வொளதியநற்படைக்கலங்க ளாலமாசெய்துகொலை புவநதுசித்த
னன்றிதுவெனறதிசயித்துச்செங்கலிங்கந்தனையுதறி நாட்டமவைத்தான் *

அக்காவித்துகிலிடைநின் றணைந்தமாட்சிகணங்க ளடர்ந்துமேவி
முக்காலமுந்தெரியுஞ் செவ்வேடன்கணங்கடமை முட்டிதஙறுற்
றக்காமற்புடைத்தகலத் தூரத்தியடினத்துகிலின் றம்வந்தெய்தும்
பகருவமதறிந்திந்த மாயமதென் றோவென் றுபரிவுகூர்ந்தே (௬௭)

அண்டமெலாந்தனதருளாற் கண்டளிக்கும்பூரணியை யத்தன்பாகங்
கொண்டகலாத்தவக்கொடியை யானந்தவல்லியெனுங்கோமளத்தை
வண்டார்பூங்குழலாளை யருந்தாதமுலையாளை வறியேன்முன்னந்
தண்டாமல்வருவாளை யெனதிதயகமலமெனுந் தவிசினளை (௬௮)

கண்ணடங்காத்திருவுருவைக் கண்டிமயன்களிந்துருகுங் கன்னிதன்னை
நண்ணுமடியார்கடம தெண்ணமெலாங்கைகூட்டு நாயகத்தை
யண்ணலுளவிருப்பகலா தடிக்கடிநாடற்கெழில்செய்தமரும் பெண்ணைப்
பண்ணகலாமொழியாளைப்பார்ப்பதியைச்சிலம்பணியும்பாதத்தாளை (௬௯)

மஞ்சாரும்பொழிலடருந் திருக்கைலைமலையிலென்றும் வாழ்வாடன்னை
நெஞ்சாரநினைப்போர்க ளஞ்சாமலெதிர்நிற்கு நிமலிதன்னை
யஞ்ஞானமொழித்தருளு மருள்விளக்கையாகமத்தி னங்கத்தாளை
மெய்ஞ்ஞானவித்தகியை வேதாந்தத்துள்ளிருக்கும் விமலிதன்னை (௭௰)

பலசமயந்தொறும்விளங்கு மொருமுதல்வியென் றுமெழிற் பசும்பூங்கொ
யலகில்சராசரமனைத்து முதவியுங்கன்னிப்பருவமாயினாளைக் [ம்பை
கலைமகளுமலர்மகளு நாடோறும்புகழ்ந்தமையாக் காட்சியாளை
யுலகிலெனக்குயிர்த்துணையாய்நின் றாளைச்சிவயோகத்தொளிரும்பொன்னை

தனையளித்தங்கருணையுடன் முத்தமிட்டுவளர்த்தெடுக்குந் தாயைத்தன்னு
ணினைவிரைவிடைப்பணிந்தேத்தி யிச்சித்தன் சாலமெலா நீக்கியென்றன்
மனைவியைத்தருதியென வருந்தினவவ்வேளையின்ம னோன்மணித்தாய்
தனையனுக்குள்ளிரங்கிவந்து தழுவிமுத்தமிட்டுமடி தன்னில்வைத்தே (சஉ)

கண்ணேயென்கண்மணியே கந்தனெனுங்காதலனேகடம்புலாவுந் [ன்
தண்ணமரும்புயசயிலத்தனிக்குருந்தேயினிவருந்தேறவந்தால் மிக்கோ
றிண்ணியவச்சித்தனெனுஞ்சங்குகனைப்பெயரினன்செயலெலாநின்
பண்ணியலுமொழிவள்ளிதெய்வானையெனுமடவார்பரிசென்றோராய்

உனதிளங்கோதையர்களையின் னுஞ்சிலவேளையிற்கண்டங்குவந்திருப்
துணியகலக்கா வாயென் றுடன் முழுதுந்தைவந்தருசொலித்திரு [பாய்
மினிமையுளமனமுலவும்பொற்கமலமாலைதனையீய்ந்தின்போதி[க்கு
யனையாகியருளாகி யெனையாளும்பெருமாட்டி யகன்றாளன்றே (சச)

(வேறு.)

உமையாளித்திறமருளியகன்றதற்பி
னுயர்குமரன் மனத்தினிடையுவகையாட
விமையோர்மாமுனிவரரகரவென்றாட
வெவ்வுலகுங்களிதுளும்பவிருகாதூடு
மமைபாலின்றொளிவிடுகுண்டலங்களாட
வளிமுரன்றுடுங்கடப்பந்தாருமாடத்
தமைவழுத்துமன்பரெலாந்துதிசெய்தாடத்
தன்மடவார்விளையாடுதலத்தைநோக்கி* (சரு)

அம்மைதருமலர்ச்சரத்தைமுடித்தோமின்றே
யரியசித்தன்விடுஞ்சரங்களனைத்துமொன்றாய்
வெம்மையுடன்முடித்துவள்ளிதெய்வயானை
மெல்லியர்தம்மூடலையுமுடிப்பாமென்றே
யெம்மனதிற்சலிப்புளயாவையுமுடித்த
யிருவினையுமறமுடிகுஞ்சாமிநாதன்
செம்மையொடுமாகாயநெறியிற்சோதிச்
செழுங்கதிரோனெனவுலவித்திகழ்ந்தானன்றே*

(வேறு)

திருமுடிதனின்மணிமுடியொருகோடித் தினகரரெனவொளிசெயவகன்மா
ர்புதவமணிமயமுலவியவாரம் பரிதிகளொருசதமிலகியதென்னக் [ர்பிற்
கரமதிலெழில்பெறுமாழியுலாவுங்கடலிடையுதயமதுறுமதியென்னப்
பரிபுரமணிமணமருவியபாதம்பவமறவருமொருகுமரனெனவே (சஎ)

தனுறுவொருவருசரவணனபிராமந் தனைமிகுதவநெறிநிலையமர்சித்தன்
கனிவுடனிருவிழியமுதெனநாடிக்கடிதினிலரிவையர்முகமதைநோக்கி [வே
முனமுறுமொருபதி யறுமுகனெனவே மொழிவதுநிசமு மதிடம்வருவடி
லமையவனதுநிலையகமதுநினைமி னடியவனெனமிசைதென்னவறைந்தான் *

தாயர்களலவெனமேனிலைவாயிற் றலையரணங்கடிதலைகொடுநிற்பச்
சேயவனுளமகிழ்கல்மருவிடவிந்தச் சித்தனைநிலைபெயரச்செய்தலாமற் [ன்
போயவர்மாளிகையுறலரிதென்னப்புதுமலர்மழையமரர்கள்சொரிதரவொ
காயமதிடையொருகோடியமெதன்னக் கனைமழைபுரையபவேலினனம்மா

இன்னிலையேயவனேவியபாண மேகுமுனேமடமாதர்கள்பால்சென்
றென்னையளித்திடுமன்னையரோவெ னெய்தியமன்னவனின்னிலமாரு
வுன்னதவும்பரினின்றனனாக வொளிவிடுகணைசொரிகின்றனனதனு
னன்னிலைகண்டமர்செய்திடுமாறு தானறியேனெனையாளுகவென்றான் *

இத்தகையாவுயர்சித்தனுமைப்ப வேதமிலாதொளிர்பாதுகையொன்றை
யத்திறல்சித்தன்மனத்தில்வியப்ப வளித்ததனிற்பதமண்ணியகாலை
வித்தகமிக்கெதிர்வானையடுத்தே வீறொடுபோர்புரிவாயெனவேலோடுஞ்
சித்தனவண்ணமியற்றவனென்றே சேதனமோடவர்பாதுகையேறி*(௫௧)

அந்தரமேசமரம்புரிவானை யண்டியவனெதிர்வன்படையேவ
நொந்திலனுகியும்வெஞ்சினமுற்றே நொடியிலுனுவிலையவிண்டிடவேனெ
றுந்தினனம்புகள்பம்புயலென்ன வும்பரிதேமடிவென்றுமையாடச் [ன்
சிந்தினனூழ்கடலுந்தணலாகச்செந்தமிழ்மாலைகொள்கந்தனடர்ந்தே(௫௨)

(வேறு)

அக்கணஞ்சித்தனு மஞ்சலின்றியே
தொக்கபல்கணைகளாற் றுணித்தல்கண்டுள
மிக்கவெஞ்சினங்கொளா வேலன்றன்னிரு
கைக்களினிறுக்கின னுடலங்கன்றவே (௫௩)

பற்றினன்கரங்களாற் பாரில்வீழ்தரக்
கூற்றினன்சித்தனுங் குப்புற்றேவிழுந்
தெற்றினன்றுவியன் னவனையில்வண
மூற்றவுமற்சமர் முயன்றிட்டாரரோ (௫௪)

சிங்கமுஞ்சிங்கமுஞ் சீறிற்றேறுவெனப்
பொங்குறும்புலியுடன் புலியுடன்றென
வெங்கயத்துடனொரு வேழமேற்றெதிர்
தங்கியநிலையெனச் சமர்புரிந்தனர் (௫௫)

மலையொடுபோர்செயு மலையதென்னவு
மலையொடுபோர்செயு மலையதென்னவுந்
தலையுடன்றலையது தாக்கவேயிடித்
துலைவிலாத்தொனியெடுத் துறுமினாரரோ (௫௬)

சித்தனிவ்வாறுநஞ் சேயுடன்பொர
மெத்தவுஞ்சினத்தொடு வேலுடைப்பிரான்
குத்தினானுரத்தினிற் குழைந்துநெக்குகக்
கைத்திறத்தான்முகில் கான்றவேறென (௫௭)

அன்பெலாந்திரண்டொரு வடிவமாயினோ
னென்பெலாநைந்திட வியறவத்தினான்
றன்பிலாச்சித்தனுஞ் சோபமெய்தினா
னின்புறுகாலம்வந் திறுத்ததாலரோ (௫௮)

(வேறு)

நந்தாதொளிர்வேற்கரவேளு நமதுசித்தப்பெருமானு
முந்துபடைகொண்டருஞ்சமரா முனாற்றிவிளைந்தபரிசுரைத்தா
மெந்தையாயவ்வேள்சித்தற் கிரங்கியருடந்ததுமலர்ப்பூங்
கொந்தார்கோதையளைவிழைவு கூரக்கண்ணுற்றதுமுறைப்பாம் (௫௯)

உயுத்தசருக்கம்.

முற்றிற்று.

ஆ. விருத்தம் - ௪௫௭





# மயூராசலபுராணம்

ஏழாவது.

## யாலசித்தர்க்கருள்புரிந்தசருக்கம்

மாயையாணவத்தொலைப்பமயி லிருப்பவிளையாமாத்திரைாக
டாயசனனக்கடல்வறப்பச் சத்தியிருப்பவருந்துயர
மேயவிடத்தென்றனக்கருள வேண்டாவோவென் றும்பர்தொழுந்
சேயைநோக்கிக்கேட்பதெவன் றெளியாயின்னுமடநெஞ்சே (க)

(வேறு)

சண்முகவன்பாலசித்தனெடுவிளையாட்டாகவருஞ்சமர்விளைத்த [ட்கு
புண்ணியமாக்கதைமொழியக்கேட்டனமேல்விளைந்தமையும்புகலக்கே
மெண்ணமுடையேமவ்வா றிசைத்தருள்கவெனச்சூத னிளையோன்ற
யுண்ணினைந்துசவுனகாதியமுனிவர்தமக்கங்ஙனுரைக்கலுற்றான் * [ளை

(வேறு)

பாயுமால்விடைப்பரன் பணித்தவாறுநஞ்
சேயினெண்கரமலர் நீண்டும்பெற்றியா
லாயசோபங்கடி தகன்றுசித்தன்மு
னேயபேரறிவுவந் தெய்தவுன்னுவான் (௩)

தாரகஞ்செவியிடைச் சங்கரற்கரு
ளோரகனேயம றியற்றுமேந்தலிப்
பாரகத்திவனெயொப் பார்களில்லையென்
றோரகத்தினன்பணிந் துவகைமேவியே (௪)

குருபரனருள்விழி குலவுமாற்றினு
லுருவமெல்லாம்புள குற்றுமெய்ம்மறந்
திருவிழியுந்துளி யிறைப்பச்சென்னிமேற்
கரமலர்முகிழ்த்துளங் கனிந்துபோற்றுவான் (௫)

(வேறு)

மதிசூடியசடிலன்றரு நாதாமலர்ப்பாதா
முதியோருளமகலாதொளிர் முழுமாமணியொளியே
விதியின்றிறமறியா துழல்வினையேனொருபொருளோ
கதிர்வேலவவெனையாளுதி கருணாகரசரணம் (௬)

மகமாயையைநிலையென்றுனி வருந்தும்மிகுசிறியேன்
புகலென்பதுநின்றாளெனும் போதம்பிறவாம [யேன்
இகல்கொண்டுனையெதிர்நின்றமரியற்றும்பிழையுடை
மிகைநீங்குதற்கருள்செய்குக வேலாயுதசரணம் (௭)

சுத்தன்சிவமுத்தன்றவ சொரூபன்கனலுருவ
னத்தன்மறைமுடிமேவிய வையானனனருளுஞ்
சதமேதமுழுமுத்தேயரு டாயேயிளஞ்சேயே
நத்தாதுனைசெவிசெய்துதை நாடாதருள்சரணம்* (௮)

பொல்லேனுனைப்புகழேனறவம்பூணேன்றுதிபேணே
கல்லேன்கலைநில்லேனெறி கடையேன்மடமுடை [ன்
வல்லேனெனைநின்றேடமர்யாருதியன்றேனை [யேன்
யொல்லாதெனைவிகழாதரு ளுமைபாலநின்சரணம்*

அலையும்முயர்மலையுந்நிலை யலையும்படியயிலான்
மலையுந்தலைமையனேசுரர் வருடுங்கழலவனே
புலமென்பதோரளவுந்தெரி யாமற்பொருதேயா
னலைகின்றனனிலையாதிவ ணறுமாமுகசரணம் (௯)

ஒருமாமலரொருமென்றனி ரொருகையுதகங்கொண்
டருமாமறைநெறியாலருச் சனைசெய்திடவறியேன்
குருவேதனிமுதலேகுணக் குன்றேயுனையின்றே
பரிவாயடைந்தனனாண்டருள் பரனேயருள்சரணம்*

இசையேபயிலளியின்றிர ளிவருங்கடம்பணியுந்
திசைதாவியபுயனேவள்ளி தெய்வானை மணாளா
வசைபோநினைநுவதன்றிநின் மருமாமலரடியை
யசையாமனதொடுபோற்றில னத்தாவருள்சரணம்*

ஒளியேபரவெளியேசகத் தருவேமலர்மருவே
யெளியேனினியுய்யுந்திற மேதும்மறிகில்லேன்
றுளியேபயின்மதுவார்பொழிற் சுலவுங்கிரியாவுந்
தளியாயுறைதருவேலவ தயவாயருள்சரணம் (௰௩)

மயிலேறியமணியேயொளிர் மதியேறியமகிழ்வே
யயிலேறியகரனேதிரு வருளேறியபரனே
வெயிலேறியகதிர்மேனிய விரிதெண்டிரையரவிற்
றுயிலேறினன்மருகாசரண் சுகமேயருளென்னு (௰௪)

(வேறு)

அஞ்சலிசெய்தன னடிபணிந்தனன்
செஞ்சொலாற்றுதித்தனன் செப்புவான்கட
னஞ்சணிமிடற்றின னல்குசாபம
தெஞ்சிடத்தீர்த்தரு ளென்னவேண்டினன் (௰௫)

ரந்துதிபுரிந் திறைஞ்சும்பாலனுஞ்
சித்தனையறுமுகத் தேவனுக்கின்
றுத்தியமகிழ்ந்தனந் தொடர்ந்துநம்மைமீ
நத்திலாதமர்செய்த நவைபொறுத்தனம் (௰௬)

ஆதலாலினித்துய ரணைத்துநீக்கியே
மாதொருபாகன்முன் வகுத்தசாபமா
மேதமுமகற்றிரே மிருந்தவப்பயன்
போதமோடுறவருள் புரிகுவாமரோ (௰௭)

சிவமுறுகோடிருத் திரகணங்களி
றவமுறுமொருவனுந் தகுதியோய்மறை
யவமுறுதலைத்தவிர்த் தமைப்பக்கண்ணுநு
ணவமுறுமளியினுற் புவியினண்ணினை (௰௮)

ஆயமெய்ம்மறைமுறை யாகமங்களுந்
தூயருட்சைவமுந் தோமிலல்லற
மேயநன்னெறிகளும் விதித்துப்பூமியிற்
பாயநற்சீர்பெறும் பரிசுநல்கியே (௰௯)

நம்மொடுமித்தல நண்ணுவாயெனச்
செம்மையினருளிப்பின் சித்தர்கோனுடன்
கொம்மைசேர்முலைநலா ருறையுங்கோயிலி
னெம்மையாளறுமுக னெய்தவெண்ணியே (உ௰)

தந்தையென்றுன்றனை யுரிமைசாற்றியே
பந்தனைத்திரண்டெழில் பரவுமாநகிற்
சுந்தரமாதரைக் காணத்தூய்த்தவ
வந்திடுவாயென மகிழ்ந்துகூறினன் (உக)

சாற்றலுஞ்சித்தனச் சண்முகன்றனைக்
காற்றிருமலரினை யிறைஞ்சிக்கந்தநிற்
கேறவாறியற்றுதி யெனவிசைத்தலும்
வேற்கரனவற்கொடு மனைக்குண்மேவினன் (உஉ)

சங்குக்கன்னப்பெயர் தாங்குசித்தனொ
டங்கனையாட்கொளு மீசன்றந்தவே
ளங்ஙனமிருந்துழி யரிவைமார்மகிழ்
பொங்குபோகவியல் ளின்பம்பூத்தனர் (உ௩)

குருபிரான்கருத்தினைக் கோதைமார்தமக்
குரிமையாற்சித்தர்கோ னுரைப்பவன்னையர்
பரிவுகொண்மனத்தின ராய்ப்பலபூணுடை
மருமலரிவற்றினை வனைந்திருந்தனர் (உ௪)

(வேறு)

காவிநேர்விழி மாதரைக்கந்தவே
ளாவலோடுகண் ணுற்றதறைந்தனந்
தாவில்வானவர் தம்மொடுமெம்பிரான்
சேவினேறிவந் துற்றமைசெப்பவாம் (உ௫)

அருள்புரிந்தசருக்கம்

முற்றிற்று.

ஸ்ரீ விருத்தம் - ௪அஉ





# மயூராசல்புராணம்

எட்டாவது.

## தேவசருக்கம்

காளமார்தரும் களத்தின்கைத்தலக் கழுமுளுமுலகமெலாந்
தாளதாலளந் திடுநெடியோன்கரந் தாங்கியநேமியுமுண்
ஞூளமார்மல ராதனன்றண்டமு நாணிடத்தகுவர்குலந்
தூளதாக்கிய வேள்கரச்சத்தியைத் தொழுதிடர்தொலைப்பாமே (க).

மாசுதீர்ந்துயர் நைமிசவனத்திடை வாழும்ந்தணரொல்லா
மீசனூர்மகன் றேவிமார்தமதுரு வெழினலங்கண்ணுற்றே
வாசமுற்றநன் மாக்கதையீதென வகுத்தனைதவச்சூத
தேசுலாவுமற் றதையுமிங்கருளெனச் செப்புதன்மேயினனூல் (உ)

நாட்டமூன்றுடை நம்பிராற்கோம்பொரு ணவின்றருள்குருநாதன்
சூட்டுமாமயிற் பரியிவர்ந்துலவுறுந் தோன்றலாகியசெவ்வேள்
பாட்டளிக்கண முரல்குழற்பாவையர் தம்மையாம்பரிவாக
வேட்டிடும்படி புரிதியாலினியென வித்தகமுயர்சித்தன் (ங)

செச்சையந்தொடை யிலகியமார்பினன் றிருவடிக்கமலத்தை
யிச்சையாற்பணிந் தப்பணிபுரிவலென் றேந்திழையார்தம்மை
யுச்சிதம்பெற வழைத்துவந்திவர்தமை யுலகெலாமகிழ்வெய்தி
மெசசிடும்படி மணவினைமுடித்துநீ வீற்றிருப்பாயென்று (ச)

மாதர்பாலுற வைத்தகூர்வேலினை வாங்கியச்சித்தன்றன்
காதல்கூர்ந்தெழிற் கந்தவேளிடந்தரக் கைக்கொடுகுமரேச
ஞுதரத்தொடு வெள்ளியங்கிரியுறை யத்தனங்குறவுன்ன
வோதமேவியசடையினனவிடையின்மே லுமையுடன்வரவெண்ணி

பூதியக்கமைந் தக்கரம்பொருளெனப் பொருந்தியகண்டநோரு
நாதன்றன்றிருப் பெறுமுருத்திரர்களு நன்னூமன்புளமேவி
யாதிதேவனைச் சாமகானத்தினு லகமகிழ்தரசெய்யும்
பூதசேனையுந் தும்புருநாரதப புந்தயாழிசையோரும் (ரு)

பன்னிரண்டுசூரியர்களுந் திங்களுமபரமனுக்கண்பாகி
மன்னுமாதவ ரெழுவருஞ்சித்தரும் வசுக்களந்தரர்சேடி
துன்னுகானகந் திருவரும்பிருங்கியாந் துதிபெறுமுனிவோனு
மென்னையாளிறைபணிசெய்கும்போதரனென்னுமெய்ப்புகழோனும்

குடைபிடித்திடும் பூதனுஞ்சரிதையைக் கோதறப்புரிவோரு
நடையகன்றிடாக் கிரியையாற்றுனர்களு நவிலும்யோகியருந்தங்
கடமகித்தமென் றுணருஞானத்தருங் கழறுமற்றெல்லோரும்
புடைபரந்திட வடைந்தனன்மயிலையம் பொற்கிரிதனிறைதன் (அ)

ஆகுவாகன மீதிலாரோகணித் தைங்கரன்மூவாங்கத்
தேகவிங்கிதன் றேசுறுவல்லபை சேர்ந்திருக்கும்பாக
னேகதந்தனுங் கரிமுகப்பெருந்தகை யென்றுணைவனுக்கின்றே
யோகையாருமங் கலமெனவகமகிழ்ந் துற்றனனச்சயிலம் (கூ

மாயவன்றுணைத் தேவியாந்திருவொடும் வளர்சிறைக்கலுழன்மேற்
றூயவின்புபா கவதர்கள்சூழ்ந்துபல் துதிநவின்றிருபாலு
மேயிடக்கதி ராழியேமுதலடல் வீறுமைம்படைமல்கச்
சேயரும்மணச் செய்தியோர்ந்தக்கிரி சேர்ந்தனன்மகிழ்வோடும் (ய)

மந்தமத்திமந் தாரநற்சுரங்களின் மரபுளியாழ்வல்ல
சந்தனுசல நிகர்முலைப்பாரதி தன்னுடன்வரமேவிச்
சுந்தரத்துவெள் ளோதிமப்பிடர்மிசைத் தோன்றினன்சதுர்வேதம்
வந்தநான்முகன் மயிலைநற்பெயரினுன் மன்னுமக்கிரிதன்னில் (யக)

(வேறு)

புலோமிசைப்பெயர் பூண்டிடுந்தேவிதன்னுடனே
விலோசனங்களோ ராயிரமேனியில்விளங்க
வெலாமளித்திடுங் கற்பகமானினமிவைகொண்
டுலாசமங்கல மகட்கெனவிந்திரனுற்றான் (யஉ)

பாகவன்னெழிற் சுவாகையாம்பன்னிதன்னுடனே
மாகமார்தருந் தகரினைத்தூண்டிமாமயிலை
நாகமேவின னடுவனுந்தென்றிசையொருவி
மேகமொத்தவன் பகட்டின்மேலுற்றனன்விருப்பால்

நிருதியென்பவன் றண்டிகையிவர்ந்துநீணிலத்திற்
பொருவரும்புகழ் மயிலைநற்பொருப்பினிற்போந்தான்
வருணனுங்கரா வூர்ந்தனனுகவந்தமர்ந்தா [ன்*
னருணமீதடற்காற்றிறைமணங்கள்கொண்டடைந்தா

அளகையாளியும் புட்பகமானமீதரிய
வளமெலாந்தரு மாநிதிகொண்டுவந்தணைந்தா
னுளவிருப்பினீ சானனுமணச்செயலோர்ந்தே
பளகிலாமயிலைக்கிரியடைந்தனன்பரிவால் (௰௫)

வசுக்களேப்பசித் தேவருமாமருத்துவரு
நுசுப்பதில்லையுண் டெனக்கொடிபோலவேநுடக்குங்
குசத்தினொழிற் குலவியவரம்பையர்குழுவு
மிசைநதிறத்துநாடகத்துநாமென்றுவெய்தினரால்*

அகத்தியன்பிரு கத்திரிகாசிபன்சனகன்
சுகதினுயர் சுகனகௌதமன்சனற்குமரன்
பகைப்புலன்றெறு மெய்த்துருவாசனபராசன்
சகத்துளோர்தொழுமார்க்கண்டன்பரத்துவாசனனே

வசிட்டனற்புலிக்காலன் மாபதஞ்சலிவியாத
னிசைக்குநற்கலைக் கோட்டன்வான்மீகனோரண்ட
னிசத்துறுஞ்சதா னந்தனீள்புலத்தியனெழிலெண்
டிசைகெலாமுயர் பார்ப்பனுங்கீரசன்செப்பும் (௰௮)

இவர்களாதியா முனிவர்களியாவருமெழிலா
யவரவர்க்குறு பன்னியரோடுவந்தணைந்தார்
புவனவாசிக ளியாவருமத்தலம்போந்தார்
கவனமிக்குறு தேவர்கண்முற்றவுங்கலந்தார் (௰௯)

(வேறு)

[illegible]ன் மாலயனமரரும்புக ழெண்டிசைக்குயரதிபரு
மாசிலாமுனிவோர்களாதிய வேனையோர்களுமகிழ்வுட
னாசிலாமயிலைப்பருப்பத மண்மியுற்றதறைந்தனந்
தேசலாமுருகன்மணப்பரிசைத்தெரித்திடுவாமரோ (௨௰)

தேவசருக்கம்
முற்றிற்று.
ஆ. விருத்தம் ௫௨.





உ

# மயூரகிரிபுராணம்

ஒன்பதாவது.

## திருமணச்சருக்கம்



பாததாமரையிணைதொறும்பரவு பாவலர்க்கரியமாவர
மாதரத்தினுடனேயளிக்குமுரு கையனைப்பனிருகையனைப் [னைக்
போதனைச்சிறையின்மேவ வைத்தருள்செய் போதமெய்ப்படிவநாத
காதல்கொண்டுபணிவோர்கண்முன்றிறனில்கற்பகம்பரவிநிற்குமே (௧)

(வேறு)

தேவருற்றதைச் செப்பியநற்றவ
மேவுசூதனை மீண்டுஞ்சவுனக
ராவல்வேண்மண மாற்றுமருங்கதை
தாவிலாம லுரையெனச்சாற்றுவான் (௨)

(வேறு)

கங்கையெழுந்தலை யுந்துசெழுஞ்சடி லந்திகழுங்கவினு
மங்கையிடங்கொளு மங்கலமுங்கன றங்குமலர்க்கரமும்
பொங்குசவுந்தர மும்பொலியுந்தனையன்பொடுபூசனைசெய்
துங்கரகங்குல வும்பரன்மேயினன் சோதிசெயாதனமேல் (௩)

மாதவராகிய நாரதர்தும்புரு மாணிசைகூறினரால்
சீதரனான்முக னேமுதலாகிய தேவர்கள்கூடினரா
ஞூதபராபர வேதசுபாகர நாகசிராபரனு
வாதிநிராமய வாவெனவேயடி யார்துதிபாடினரால் (௪)

எத்திசையும்முத் திக்கிணையாக விருக்கவெழுந்தருளெம்
மத்தனகத்தில் விருப்புடனுற்றிடு மத்தனைபேர்களையுந்
தத்தமதற்குத் திக்கிசையாகிய சம்ப்ரமநல்கியுற
வுத்தரநல்கி யிருத்திடுமயன்றனை நோக்கியுரைக்குவனால் (௫)

சேருமன்னவ ரோடுறுமாமுக னேமவிவாகமது
சீருறுமித்தின மாகவிநோத சிகாமணியாலமர
ரானவேயொளி வீசவியற்றுதி யோதருகாவணமென்
றாணிவேணிய னேவவிதித்தன னமரர்கள்கம்மியனே (௬)

(வேறு.)

செம்பவளக்கால்களளப்பிலவாயங்கிலகவுமத் திகழ்கான்முற்றும்
பம்புமொளியுறுவயிரப் போதிகையின்பணிவனப்பும் பசியகாந்தி
யம்புவனமுற்றும்விடு மரகதபபாவுச்சிலையு மருங்கபோத
மும்பருலகினை நகைக்கு மாணிக்கத்திரள்களினு லொளிரச்செய்தே (௭)

எழுதயனுங்காணாத வாடகத்தாலெழுதகமு மெழினாட்டுக்கல்
பழுதகன்றவெண்பொன்னாற்பாய்ச் சிமிருமொளியமைந்தபரட்டுக்கற்கண்
முழுதிலகுமிரசிதத்தாற்குயிற்றியொளிர்தளஞ்சோதிமொய்க்கும்பொன்னா
லழகுமிகப்பொலிந்திடவத்திருக்கைலைமண்டபம்போலாக்கிப்பின்னும் (௮

நவமணியின்கதிர்க்கோவையிடையிடையிணைத்துமதிநகுவெண்முத்தின்
றிவளொளிதுன்னியபடங்கு சித்திரவிதானமுமேற் றிகழத்தூக்கி
யிவர்கதிர்ப்பன்மணிகுயின்ற சித்திரங்கள்விசித்திரமா யிலங்கத்தீட்டிக்
கவையியபற்பூஞ்செடிகண்மலர்க்கொடிகள்பன்மணியாற்கவினச்செய்தே (௯)

மேல்விளங்குபொற்படத்திற் கிளிமயிருராவனங்கள் வீணைவல்லோர்
தோல்வியிலாமல்வீரர் நடம்புரிபமரம்பையர்க ளிலங்கத்தீட்டி
மால்விளங்குஞ்சுந்தரவி தோதவோவியங்கண்பயல் வழங்கக்கோட்டிக்
கோல்விளைப்பூந்தளிரிலைக்காய்கனிமரங்கள்பன்மணியாற்குலவநாட்டி (௰)

காழிலங்குமரகதப்பா சிலைபவளக்கனிக்குலைவெண் கனகத்தண்ட
வாழைகளைவாயிறொறு முகப்பினொளிர்தூண்களுடன் வயங்கநாட்டிக்
கோழரையவிரசிதத்தாண் மரகதப்பைந்தோகைதுகிர்க் குலைக்காய்பூக
மாழைமுதலியகாட்டி மகரதோரணநிரைகள் வகுத்துப்பூட்டி (௰௧)

கனிக்குலைகள்பூம்பாளை வகைதூக்கிப்பலமலர்சேர் கடித்தார்தூக்கித்
தனிக்கதலிகளிடையிடையே தமனியப்பூரணகும்பந் தயங்கவைத்துப்
பனித்துளிமென் மதுப்பாளை யுலைவிரியவவற்றின்மணம்பரவச்சேர்த்தி
நனிக்கிரணமணித்தவிசு மாதனமும்பீடிகையு நலத்தமைத்தே (௰௨)

இன்னணம்பல்வளம்புனைந்த தெய்வமணக்காவணத்தை யிலங்கயாரும்
பன்னுகடவுளர்சபையைமிகச்சிறப்பவலங்கரித்துப்பரமனைவாற் றிமாந்தி
கொன்னுனைவேற்கரக்குமரன் கோமளச்செம்மேனியெழிற் கொழுந்தேன்
மன்னிமயன்மதர்த்துலவு மளிவிழியாரிருவர்மண மனைசெய்வாரும் (௰௩)

காலெல்லாநாற்காலக் காலனந்தங்காலூன்றக் கவினுமந்த
மாலெல்லாமிந்திரனே மனமகிழ்வானெனும்பிரமா ளத்தின்காலா
மேலெல்லாநவமணியின் கசிதமதன்கிழெல்லாம் விளங்கும்பச்சைப்
பாலெல்லாமரகதமா ணிக்கத்தாற்பீடமின்னப் படைத்திட்டானே (௰௪)

அத்திருமாமணவறையை நாடினவர்க்குதரவனலமுங்கொன்று
மொய்த்தமிழியரும்பழிமர பாவமெலாந்திருநீற்றை முழுமெயுங்கொள்
ளத்தகுதியோர்க்குற்ற நவையகன்றுவெனவகலு மதன்சீர்சாற்ற
நத்துமயனிர்திரன்மா முனிவர்வலிபிலவொன்றுறுமென்சொல்கேன் (௰

மந்தமாருதமுறாவும் பந்தருமப்பந்தரொடும் வரிதேர்வண்டர்
சந்தவிசைமுரன்றெழுந்தா டிடக்குலவுமணிப்பொழிலின் றருக்கவிளங்கும்
வந்துகளிமடவனங்க ளஞ்சிறையமிஞ்சுகங்கண் மயில்களின்ன
விந்தைவிந்தையுடன்கதியாற் கிளவியினுடனத்தால்வேட்கையூட்ட (௰௫)

மேழிலேம்பாலேச்சரள மிதழிமுல்லை
மருவாரமல்லிகைமந் தாரமருக்கொழுந்துநறுஞ்செவந்திமன்ற
லுருவாருங்கமலநறும் பாடலமென்பாரிசா தங்கரந்தை
திருவாருமலர்தூக்கிமயன் வளங்கொண்மணவறைகள் சிறப்புச்செய்தான்*

இன்னணம்பல்வளநிறைந்த திருமணமண்டபந்தன்னை யிமயப்பாவை
தன்னையொருபான்மருவும் பரனுக்கிமகிழ்புரிந்தச் சபையின்கண்ணே
மன்னியநாரணன்முதலோரி யாவராயுநாடியெழில் வடிவேலாற்குச்
சொன்னமறைவிதியாக மங்கலநானம்புரியத் தொடங்குமென்றான் (௰௮)

எவ்வுலகுந்தந்தருளு மிறைவனருடாங்கியய னிமையோர்கூடித்
தெவ்வரியாநாரணற்குத் திருமருகனறுமுகனைச் சிந்தையன்பாற்
பவ்வமீற்றிஞ்சர்ண கமலமந்தப்பணிந்தேத்திப் பலரும்போற்று
மவ்வியந்திர்க்கங்கா ளிந்திசர்கவதிபொன்னி யவைமுன்னுன (௰௧)

நவதெய்வநதிப்புனலும் வரவழைத்தேயத்தேவை நர்பீடத்திற்
புவனமெலாமுய்ந்திடவீற் றிருக்கச்செய்தத்தீர்த்தம் பூரித்தாட்டி
யுவமையிலாக்கழையமுத ஞைமந்தமுதம்பாறயிர்நெய் யொளிருந்தானழு
நவையறுநல்விளநீர்மா மலர்தோயுமுதகஞ்சந் தனநன்காட்டி (உ௰)

மந்திரகும்பேபூதகத்தா லபிடேகஞ்செய்துசித மலர்மெல்லாடை
தந்துநறுநீர் துவட்டிச் சிகையுலர்த்திச்சிகழிகைப்பின் றழைப்பவேய்ந்தே
யிந்திரனன்பொடுகொணர்ந்த கனகமணியம்பரத்தை யிலங்கச்சூட்டிச்
சந்திரவெண்ணீற்றினைநம் பந்தமறுப்பவனுதலிற் றயங்கச்சாத்தி (உக)

திருமுடிகளோராறுஞ் செங்கதிர்கள்கோடியெனத் திகழும்வண்ண
மொருமையதாப்பிருங்கிமுதன் முனிவர்களெலாம்பணிந்தே யுவகைபூப்ப
வரியதுதிபுரிந்துசிரங் களிற்சூட்டிவில்லையவரு மறியொண்ணாத
பொருவறுமீராறுகுழை யத்தொகையாஞ்செவிகள்கொளப் பொலிவித்தா
[ரால்*உஉ)

கார்த்திகையாராறுவர்களு டற்றையுளராரகையங் கனைத்தோடெய்திச்
சீர்த்திகழுந்திருமார்பந் தன்னிலெழின்மாலையதாத் திகழ்ந்தாவென்னப்
பார்த்துயர்ந்தநித்திலமா வடந்தையளகைத்தனதன் பரிவிற்சாத்த
மார்த்தாண்டனொளிரும் வைரமுதல் மணியரிகள் மகிழ்ந்திட்டாரால்*

தனக்குமுளமிட்டாணவத்தைச் சாற்றினேன்மணக்கோலந் தன்னைநோக்கா
வனைத்துயிர்கண்ணேறுபடா வணம்பரமனிற்றுக்காப் பணியமுத்த
மினிற்றிகழும்வாகுவல யங்களத்தகடகங்கண் மிளிருமாழி
பணிக்கமலமலர்ப்பதத்திற் பரிபுரமொண்சமல்புனைந்தார்பரவும்வானோர்*

பாலசித்தனெருகமல மலரமலக்கரத்துதவிப் பணியாதிற்ப
வேலுமுனிவோர்களெலாம் பூங்கடப்பமாலைகண்மார் பிலங்கவேய்ந்து
மூலசடானனபரம ராசியகௌமாரசுப முருகதண்டைக்
காலவயில்வேலவசு டாக்கரவென்றருந்துதிகள்கழறிச்சூழ (உ௫)

அரம்பயிற்கனுருப்பசிநல் லழகுமேனகைதிலோத் தமையன்பான
வரம்பையர்களிருபுறமு தாடகமாடிச்செல்வ வாயிரங்கை [த்
யொருங்கினிற்பெற்றுள வாணன்குடமுழவமிடியெனவே யொலிசெய்தேக
திருந்தியசங்காயிரங்கை யாயிரம்வாய்ப்பாணுகம்பன் சிலைத்தங்கேக (உ௬)

வாசுதேவன்மகவா னிருவர்களுமுளமகிழ்ந்து வரவாணோர்க
ளாசகன்றகந்தருவ ருரகர்கருடர்கள்சித்த ராகாயத்தோர்
நேசமிகுநாற்றிசையுஞ் சூழ்ந்துமலர்மழைபொழிய நிலையேநிற்கும்
பூசுரர்கள்வேதமழை பொழியமணமண்டபத்திற் புகுந்தானன்றே (௨௭)

(வேறு)

திருமணவறைதன்னிற் றிகழுமணிபீடத்
தொருவருநிகரில்லா வுமைசுதனமர்போதி
லிருசெவியிடையோடி யிகல்செயுமவிழியாத
ரிருவரும்வருமாறு மினிதுவிளம்புதுமே (௨௮)

மலைமகளேவலின்வெண் மலர்மகடிணைமோது
மலைமகளபிராணி யருமறைமுனிமாதா
நிலமதிலுறைமடவா ரிவர்பிரியமதாகக்
குலவிடமான்மகளைக் குஞ்சரமகளுடனே (௨௯)

பொற்பலகையிலுய்த்தே புனிதமதுறுபுனலா
லற்புதமுடனாட்டி யணிபணிநீராட்டிப்
பறபலமலாவாசம பறறியவமுதாட்டி
விற்பனமொடுதூசான் மேனியினறமேலாட்டி (௩௰)

குழலிடையகில்வாசங் குலவியபுகையூட்டி
யழகுறுசடைபின்னி யணிபலவணிசெய்தே
யிழையொருசோடிபெறு மிணையறுதுகில்சாத்திக்
கழைநிகர்தோளினிடைக கச்சிறுகப்பூட்டி (௩௨)

மதியினைவெல்லுமொரு வரியரவெனுமுகமா
மகிழிசைநறைகமழும் வார்குழல்வகிரவிலக
மதிகதிரிருவர்களும் வந்துறையுந்தகையின்
மதியணிகதிரணியும் வகைவகையுடன்சூட்டி (௩௨)

நெற்றிபனிதிலவொண் சுட்டியையமைதாக்கி
நக்ஷத்ர முத்தொளிர நாசியினணிபுனையாப்
புத்தெழிலுறுபூகம பொருமொருகந்தரமீ
திதுதுணையுளவிலையென் றிசையுமாதனமே (௩௩)

நிலவியமணிமாலை நித்திலமாலைபுட
னிலகுபொன்னரிமாலை யிசையளிமுரலமணங்
குலவியமலர்மாலை கொத்தெழில்வித்துருமத்
துலவியதணிமாலை யொளிபெறவணிசெய்தார் (௩௪)

புகறரவரிதாகும் பூடணமவைபுனையா
வகல்புவிவிண்ணுக்கு மபயமதருளத்த
நகைபெறவளையாழி நகையொடுபுகுவித்துச
சுகமருளடியிணையிற் றொடிபரிபுரமணியா (௩௫)

இன்னனவிழைகளினு லெங்காயிருவரையும் [தே
பொன்னியல்பதுமையெனப் புகல்வணமழகுசெய
யன்னிலைதனிலமுனிவோ ரரிவையரிருபாலுஞ்
சொன்னலமொடுவாழ்த்துரு சுபகரமொடுநடவா

நிறைகுடமொளிர்தீப நிழறருசாமரைநன்
முறையுறுகொடியாடி முரசிணைகபலோடு
மறைதருமங்குசமா மட்டகமங்கலமும்
பொறையுறுமடநல்லார் போற்றினாகொடுசெலவே

விண்ணவரிசைகூற மேலவர்துதிசெய்ய
மண்ணவரன்பின்மண மலரடிதனில்வீழப்
பண்ணமர்மொழியெழிலார் பாரதிபதுமையெழி
லண்ணியசசிமுதலோ ரங்கையிலேந்தினர்போல்

சிவிகையிற்கொடுபோந்து திருமணவறைபுக்குக்
கவிகைநிழற்றியெழிற் கநதணதிருபாலும்
புவிமுதன்மூவுலகும் புகழ்தரவமர்வித்தத்
தவிசருகுமவினிதிற சபையினிருந்தனரால் (௩௬)

வேதியினல்வேத விதிபிறழாவணமே
வேதிகையிசைகுசையை விரிதரவைத்துள்ளத்
தாதரமோடுமறு வோதிலக்கினியி
லேதமிலவிகள்சொரிந் திலகவளர்த்தியபின் (௪0)

சித்தரிலுயர்பால சித்தனைநோக்குபுநீ
பெற்றிடுபுதல்வியர்போற் பெற்றிடுமுரிமையினாற்
றத்தமதீகவெனச் சதுர்முகன்மொழிதரலு
மத்தகுதாரையினீ ரனுமைமகைப்பெய்தான் (சக)

தழைமதிவேணியான் றுரையினீர்கொளலுங்
குழைபொருமதருண்கட் கோதையரிருவர்தமை
மழைநிகருண்முருகன் மலர்க்கரமவைபற்றி
விழைமகவழல்வலமா மேவியிருந்தபினே (சஉ)

பூசுரர்மறைநீடப் புலவர்கள்புகழ்பாட
வாசகன்முனிவரொலா மாசிசொலிக்கூடப்
பாசிழையாரமரர் பாவையர்மலர்போடக்
காசணிமுலையமரக் கணிகையர்நடமாட (சங)

வாரணிமணிமுரசம் வல்லிசைகுடமுழவ
பேரிபடாரியொடுஞ் சல்லரிநீள்பம்பை
சீரிசைவளைவீர சின்னங்குழல்கஞ்ச
மார்கலியெனவைம்பாற் கருவிகளார்த்தனவே (சச)

மங்கலசூத்திரமம் மணிவணனணிமருகன்
செங்கையினேந்திமணத் தெரிவையரிருவர்களம்
பொங்குறுமழகெய்தப் பொற்பின்மகிழ்ந்தணியச்
சங்கரனுமையுவகைச் சாகரமூழ்கினரால் (சரு)

அரசினைவலமாகி யறுமுகனொளிர்கையினாற்
சுரிகுழலரிவையர்மென் றுணையடியம்மியின்மேற்
சரசமதுடன்வைப்பத் தையலருந்ததிதான்
பரிவுடனெதிர்நிற்பப் பார்த்தவருக்கருளா (சசு)

இவ்வகையெ[illegible]லாக வியன்மணவிதிகளெலாஞ்
செவ்வியநான்முகனுஞ் சித்தவிருபபுடனே
யெழாவ்விடத்தியபின் னுத்தமியாருடனே
திவ்வியமாளிகையிற் சென்றனன[illegible] (சஎ)

மாயவனார்வதுவை மண்டபமத்தியினி
னாயகனும்முனிவர் நாவலரேனையுளோ
ராயவாதங்களுள வாவலொழிந்திடுபொன்
றூயபல்பூடணமுந் தூசொடுவீசினனால் (௪௮)

கற்பகநிதிகளெலாங் காமருமிந்திரனா
ரற்புறுமேகமென வாதுலர்வேதையெலாந்
தற்பரனருள்பெற்றோர் சஞ்சலமற்றதுபோற்
சொற்பொழுதிடைமாறச் சொரியமகிழ்ந்தனரால் *

இன்னவிசேடமெலா மெய்தியபின்முருகன்
பன்னியரிருவருடன் பால்பழமுண்டருள
மன்னியகலைமகளு மருமலர்வளர்மகளு
முன்னதமுடனூட்டி யொப்பறுமகிழ்பெற்றார் (௫௰)

தெய்வதநற்பசுவுந் திருமணமுனிவந்தோ
ரெய்தருமகிழ்மலிய வின்சுவையமுதுபடைத்
தய்யமில்பாகமை யு மன்புடனேயருளத்
துய்யவிருப்பினுடன் றுய்த்தனரியாவருமே (௫௧)

மான்மழுவேந்தியநம் வள்ளலினருள்பெற்றுத்
தேன்மருவுந்துளவத் திருமகளிறைமுதலாம்
வான்மருவும்பரொடு மாதவர்யாவர்களும்
பான்மையிலவரவர்தம் பதியுறைமேவினரால் (௫௨)

அவரவருறைபதியி னன்புடனேகியபி
னவரையுமுனமேதந் தினிதருள்செய்தபர
சிவனருளொடுபால சித்தனையெதிர்நோக்கித்
தவலருமுன்சாபந் தணங்கினிமகிமென்றான் (௫௩)

நிறையருளொடுமமல னின்னநிகழ்த்துதலுங்
குறையகல்சித்தனெனுங் குணநிலைமிகுபுகழோ
னறுமலரடியிணையை நன்குபணிந்திடலு
மறமருளுமையவளுக் கதிபதியீதுமொழிவான் (௫௪)

(வேறு

இத்தலத்தினமதிளவ விலகியவேற்சண்முகனே டினிமையாக [ப்
வொத்தமர்ந்தங்கெழிலைந்நூறுண் டுலகிலாகமத்தினொழுக்கமவாயப்ப
பத்திநெறிதருபூதி யக்கமைந்தககரம்வளரப் பலருஞ்சித்த [டி
சுத்தியினாற்சித்தியுடன் முத்திபெறுமந்தணத்தைததொகுத்துக்காட்

பின்னர்நம்பாற்கலந்திருத்தி யென்னவரமினிதருளிப்பிரணவத்தை
மன்னவருட்குருபரனோ டளவளாயற்புதத்தின் வாழ்கவென்று
தன்னரியவருட்குறிகை யிறுவிப்பின்கைலைமலை சார்ந்தானன்பா
லென்னையெடுத்தருளப்பனப்பணிவானொப்பில்லானிறைவன்றனே *

அங்கவர்கண்மகிழ்ந்திருப்பச் சூதனருட்குமரனியலாடல்சொல்வான்
மங்கலநல்வினைமுடிந்த பினனொழின்மான்பயந்த வலலியோடுந்
செங்கலசக்கொங்கையிபம பயந்தமலாக்கொம்பினொடுஞ்சிறந்தகாதற்
பொங்குகடலாரின்பந் திளைத்தாடியினிதமர்ந்தான் போவேலானே *

சின்னாளின்பந்திளைத்துச் சிவஞானமுணர்தவத்தாற் சிவஞானிபபேர்
பன்னரியபாலசித்தற் களித்துமணிச சிவிகைமுதற் பலவுமீந்து
தன்னருகின்வரப்புரிந்தே யென்னைவழிவழியாளுஞ சாமிநாத
னுன்னரியமானமிசைந் தேவியர்களிருவரொடு முவப்பினேறி (ருஅ)

மயிலைமலைநின்றெருவிச் சூர்தடிந்தவடிவேற்கை வரதன்சென்று [ஞ்
பயிலிளஞ்சூன்முகில்பரவும்பொழிலுடுத்தபருப்பதங்கள் பலவுமேநத
செயிரகற்றுமுயர்தெய்வத்தலம்பலவுஞ்சென்றாடல் சிறப்பச்செய்தே
யியலுமறையோடுசிவா கமநெறியிவ்வுலகினிடையிலக்வெண்ணி (ருகூ)

சித்தன்முகநோக்கிநம தெந்தைமுனமுனக்கருளிச் செய்தவாறே
யெத்திசையுமறைமுறையா கமவழிநின்றிடும்வண்ணமியற்றுகென்ன
மூத்தனாறுமுகச்செவ்வே டனதுதிருவாய்மலர்ந்து மொழியலோடு
மத்திறஞ்செய்குவலென்றே வடியருடன்றேசமிசையடர்ந்துபின்னர் *

பொய்திகழுமிடைமடவார் போகம்பேரின்பமெனும் புன்மைத்தாய
நொய்யவுலகாயுதம்புத் தஞ்சமணமீமாஞ்சை நுவலும்பேறில்
கய்தவப்பாட்டாசாரியம் பாஞ்சராத்திரமாங் கடைமைத்தாய
மய்தவீருப்புன்மைதரும் புறச்சமயமனைத்தினையு மாயநூறி (சுக)

நிலவுங்கச்சமயமெனுஞ் சைவமாவிரதமொடு நீடும்விஞ்சை
பல்வுறுபாசுபதங்காளா முகமேவாமம் வைரவநற்பண்பி
னலமருவுமிவைகளுநறுந் தாகளகற்றிப்பாலசித்த னண்ணலோர்ந்து
குலவுநலப்பக்குவமே யுற்றவர்களாங்கன்பு கொண்டுமேவி (கூஉ)

தக்கமறைநெறிபருளும் பாலசித்தனருட்கமலச் சரணஞ்சார
மிக்கவருட்கண்சாத்தி யவர்பாசம்பாறறிவெய்ய வினைகடூய
வக்கணநதெய்வதப்பூதிப் பிரசாதமினிதருளி யன்பினமேவு
மக்காணும்பவத்தொலைப்பா மெனவருமினுறுதிநிலை வழங்குவானல்*

உரிமைபொடுமுழுவலன்பா னமதுசரணடைந்ததனு லுறுதியுள்ளத்
தரமுடையிருப்புநெறி கேண்மினெனப்பாலசித்தன் சாற்றுகிற்பான்
பிரமமதைமொழிசைவ சமயசித்தாந்தம்மறையிற் பேசுமூல
மருவுபொருளாதலினுற் றெய்வமறையிதென்ன வகுக்கலாமால் (கூச)

ஆதியாதியப்ரம னருளினுற்றோன்றினபல்லாகமங்க
ணீதியாஞ்சைவமிலா குலபேண்ணும்பாசுபத மிதநில்சோம
மோதலுறுர்வாமமுயர் தக்கணமோதையமிசிர முரைத்தநான்கு
நீதிலுயர்சித்தாந்தம் பெறுமுன்னமுரைத்தவருட்சீர்கொள்சைவம்*

புகல்வாமஞ்சத்திபரம் வைரவற்காந்தக்கணம்பின் புகலுமேமு
நகினல்லார்க்காமிசிரமேதைமறைசொலுந்தருமநவிறலானும்
பகர்தருபன்மதங்கள்கெடநின்றுபொரலானுமுயர்பதமேநல்குந்
தகைமிகுசிவாகமசித்தாந்தமனறமதமாகத் தழைப்பதாமே (கூசு)

காமிகமேமுதலாய விருபத்தெட்டாகமத்துங் கலக்குமீச
னாமவனுத்தரபாக முழுதுடைத்தால்வீரசைவ மவற்றின்பாலாய்
நேமமொடுசித்தமயஞ் சிவமாகக்கொண்டுவித்தை நிரந்தமாயை
சேமமகன்றிடககடிதநிகழ்வீரசைவமெனத் தெரித்திட்டானல் (கூஎ)

(வேறு.)

என்றினிதாகவகச்சமயத்தையெடுத்துநிறுத்தியபி
னன்றுருநால்வர்தமக்குபதேசமளித்தவனேயிவனென்
றொன்றவுணர்த்திடவையமும்வேறுடனுற்றுகலந்தனர்
சென்றனனுறுமுகக்குமரன்றிகழ்சித்தனதாச்சிரமம் (கூஅ)

(வேறு)

போந்தவுடன் முருகேசன் றுணையடியைப்பாலசித்தன் பூசித்தெந்தாய்
சாந்தவருட்கடலே சண்முகத்தேவேயெனத்துதிகள் சாற்றுங்காலே
வாய்ந்தசிவஞானி யுன்றனபூசைதுதிவியந்தாமுன் மனத்தினெண்ண
மாந்திறநீபுகறியெனச் சிவஞானபாலசித்த னறைவான்மன்னோ (சுகூ)

எம்பெருமநினதுதிரு வருட்கிசையவிம்மடந்தா னென்றனுழிலே
செம்மையுறவமைந்ததனு லென்சிடற்கபிடேகச் சிறப்புசெய்து
மும்மையுலகும்புகழத் தேசிகப்பட்டமுதல்கி முதுபாரேத்தக்
கொம்மைமுலேயுமைபாலாவென் பொருட்டுன்னருளிங்குகூர்தல்வேண்டும்.

எனவுரைத்தவாறன்னோன் சிடனுக்குசிறப்பாதி யீந்தமர்த்திப்
புனையுமக்கமணிநீறு தாரணஞ்செங்கலிங்கமின்ன பூணச்செய்தே
யினியபாலருந்தியுறத் தன்னமிசத்தோரமிச மிருத்தியென்றுங்
கனைகடற்பார்தொழச்சிட பரம்பரையின்வாழ்கவெனக் கருணைகூர்ந்தே.

பாலவயதொடபிரம நிலேயுணர்ந்தநீயமர்ந்த பரிசான்மெய்ம்மை
சாலுமிந்தவாச்சிரமம் பாலமடமபிரமபுர மென்னச்சாற்றி
கோலமயிற்குமரேசன் சிவஞானியொடமன்பிற் குழுமியேகி
வேலேயிடைத்திகழ்புவியி லுயிர்தழைப்பமயிலேமலே மேவினுனல் (எஉ)

எய்திமயிலேச்சிலம்பிற் சூரன்முனம்வேண்டியவா றெழிற்கோயிற்குட்
டய்யலர்களிருபுறமு மினிதிருப்பவமர்ந்தனன்வேற் சாமிநாதன்
றுய்யசிவஞானதேசிகத் தேவனவ்வரையிற் றுலங்கைஞ்ஞாருண்
டெய்தளவுஞ்சிவஞானச் சித்தவுருவோடுலகரேத்த நின்ருன் (எக)

பின்னரருட்குமரேச னுலயத்தினணித்தாகிப் பிறங்குந்தென்பால்
மன்னிலிங்கவுருமேவி வானவர்மண்ணினருரகர் வந்துபோற்றி
யுன்னியவெலாமடைய வளித்திடுவான்சித்தர்பிரா னுறைந்தானென்னுத்
தன்னேநிகர்குருதமுனி வரனுரைப்பமுனிவர்மகிழ் சார்ந்தாரன்றே (எச)

(வேறு)

கந்தவேளிருகன்னியர்தம்மையும்
வந்துமாமயிலோங்கலின்மாமணஞ்
சிந்தையன்பினிற்செய்தமைசெப்பினுங்
கந்தமாமலர்த்திர்த்தங்கழறுவாம். (எரு)

திருமணச்சருக்கம்
முற்றிற்று.
ஆ. விருத்தம் - ருஎஎ.





உ

# மயூராசலபுராணம்

பத்தாவது.

## தீர்த்தச்சருக்கம்



சரதமறைக்கொருமுதலைத் தனையடைந்தார்க்கிருமுதலைச் சாராதானைக்
கரதலமாமொண்மணியைக் கருதுமன்பர்கண்மணியைக் ககனத்தேவர்
விரதர்தொழுமயில்மலையின் மேவுசமன்றடஞ்சுனையில் விளங்குமெய்ம்மை
வரதவிநாயகனையன வரதமுநாம்பரவியின்ப மருவிவாழ்வாம்.*



இருபரவைத்தோன்றுமொரு பிறைபோற்கண்ணுதலுமையுள்ளின்பம்பூப்
வருபரஞ்சேர்தோணியெனக் கங்கையிடைப்பிறைதவழ வயங்குவேணி. [ப
யொருபரமாம்பொருள்கொள்ள வருமறையின்பொருளைவிரித்துதவுஞான
குருபரனெழிற்குமர னிருசரணமலர்சிரத்திற் கொண்டுவாழ்வாம். (க)

உரைநவிலற்கருஞ்சூத னுபயசரணாரவிந்தத் துள்ளன்பார்ந்து
கரகமலங்குவித்தேத்திக் கசிந்துருகித்தாழ்ந்துகலைக் கடலேயின்னும்
வரமுதவுபெருந்தீர்த்த மூர்த்திதலமான்மியமும் வகுத்திடென்று
திரைமுனிவர்வினவுவதற் குளமகிழ்ந்தேயம்முனிவ னிகழ்த்தலுற்றான்.(உ)

(வேறு)

அருளார்கைலையாளிமுன மளித்தசாப மகலுதற்கு
மிருள்சீக்குஞ்செங்கதிர்வேல னெதிர்வந்தருளைத் தருதற்கு
மருண்மாலைமகனோடிபமகடன் மக்களாக வாய்ப்பதற்குந்
தெருளார்சித்தன்கண்டதனிற் றிளைக்குந்தீர்த்தஞ் செப்பரிதே. (௩)

எந்தையமருஞ்சந்நிதிக்க ணியைந்ததென்கீழ்த் திசையதனிற்
சந்தமொருகாவதங்கமழுங் கமலமலரு மழகுடைத்தாய்
வந்துவானோர்முதலோர்கண் மகிழ்ந்துமூழ்கி விசுவேசன்
செந்தாள்குமரன்சரண்போற்றிச் சீர்பெற்றிலகத் திகழ்ந்திடுமால். (௪)

அவுணரிடுக்கணொன்றுமுறு தமரர்கோமா னன்பொடுவந்
திவணமையில்லச்தீர்த்தமதி னுவப்பின்மூழ்கி யொப்பிகந்த
தவையிலாதவைந்தருவுநாற்கொம்புயிரா வதப்புகழும்
புவனம்புகழ்சீர்த்தியதாகப் பொருந்திவாழவருளியதால் (௫)

தீராக்காசஞ்சூலைவெறி செறியுங்கரங்கா லனவுகுன்றி
யாராத்துன்புதருங்குட்ட மடரும்பாண்டுமெய்ந்தடுநகம்
வேரார்வெதுப்பு முயலகனும் வெந்நோயிரணபபுண்பலவும்
பாரார்மூழ்கிற்பரிகரிக்கும் பாலசித்தன்றீர்த்தமதே (௬)

புதல்வரின்றிவருந்துமவர் பொழுதுமூன்றுமூழ்கியொரு
மதியங்கறுமாமுகவகோயில் வலமாய்ப்புறக்கோ முனைமலியு
முதகமருந்திதீறணியி னுயராதனதகி லொருகுடைக்கீ
ழதிருமுரசமுழங்கவுல காளுமகவைபபெறுகுவரால் (௭)

தனதுகொழுநன்பரத்தையிலந் தனைவாப்பிரியலுப்பத்தனையே
மனதிற்கருதா துறவருந்து மடவாரசதீர்த்தத்தினிற்பங்
குனிமாதத்துத்திரநதொடங்கிக் கூறுமதிமூன்றினுமூழ்கிற்
கணிவிற்கூடிபிரதியைவேள் கலத்தல்போலக்கலந்திடுவான் (௮)

மணமதின்றிவருமையினல் வருந்துமாந்தரைந்துமதி
யணியுங்காடியறுமுகல னுலயத்தைவலம்புரியிற்
பணமாரல்குலரம்பையாதம்படி வமுற்றுந்திரண்டொருங்கு
தணியதெனப்பேரெழிலார்ந்த நங்கையாரைமணம்புணர்வார் (௯)

கல்விபொருண்மெஞ்ஞான முறக்கருதுமவரத்தடமூழ்கி
யல்லும்பகலுமத்தலத்தி னையில்வேற கடவுள்விழிபருளாஞ்
செல்வந்தருசந்நிதின்று தெரிசித்தோராண்டுறைவரெனிற
பல்லோர்புகழ்சேடன் றனதன்பாவுஞ்சுகனோராகுவரால். (௰)

அணிமாமுதலாஞ்சித்திபெற வாசையொருவர்க்குளதாயிற்
கணியாயுருவுமனமெடுத்தோன் கருதுமயிலைப் பருப்பதத்தி
றணியாவைந்துவருடமத் தூபதடநீராடியவும்
பணிப்பித்திபெனப்பகர்ந்தாரான்றமேலோரே. (௰௧)

அத்தீர்த்தத்தின் றிருநாம மறையுங்காலைச் சிவஞான
முதகதீர்த்தஞ் சிவதீர்த்த மோனதீர்த்த மூவாத
பத்திதீர்த்தம் பாலசித்ததீர்த்தம் படிவோரிட்ட மெலா
மொத்தங்களித்தலாலிட்ட சித்திதீர்த்தமெனவுரைப்பார் (௰௨)

எங்கள்பெருமான்சந்நிதிக்கெதிர்க்கீழ்த்திசையிலிந்திரன்றான்
பொங்குமன்பாற்கண்டதொரு புதியதீர்த்தமதன்பெயரோ
துங்கமுலவுமைராவத தீர்த்தமதாமதனிற் றோய்ந்தவர்கள்
கொங்கையரம்பைமாதர்நலங்கொள்ளைகொண்டக்குறைகுவரால் (௰௩)

அந்தமயிலைமலையில்வன்னி யாக்கினேயப்பக்கத்திற் கேணி
வந்துபுரிந்ததமூழ்கிமுன மலர்க்கையமைந்தபேறதனு
லிந்தநாளுமுலகினுளோ ரேகிவன்னிதீர்த்தமதிற்
சிந்தித்தாடின் முடங்கலெலாந் திருமைம்பானும்பருவமதில் (௰௪)

தென்பாலவனம்பரமன் றிருத்தாளுன்னையாற்றேகமுட
னென்புங்கலங்குந்தன்மையினு லெமறியாடியினைறவி
ரன்பார்தருமதீர்த்தமதி லாடினோர்வந்தடர்பகைஞர்
தன்பால்வருந்தாரிடமேலி தாங்கிவாழ்வார்திண்ணமிதே (௰௫)

நிருதிதிசையினிருதிமுன நிரும்பித்தசுரர்தண்டனையாற்
பொருதுவேலைப்பொடியாகும் பொற்றண்டிகையையதின்மூழ்கி
பரிதியொளிபோற்புதுக்கியதோர் பாங்கதாகுநிருதிதி
யரிதினரிதந்திப்பெருமையளவைப்பகருவாரெவரே (௰௬)

குடபால்வருணனிடங்கரெனுங் கூர்வாளெயிற்றுவன்மீன்ற
னிடணீக்குதற்கோராண்டுபடிந் ததன்பினல்லதீர்ந்தனனம்
மடலார்கமலமருவிரிக்கும் வருணதீர்த்தப்பெருமையையிக்
கடல்சூழ்புவிதனில்யாவர் காண்போர்கதிர்வேலவனல்லால் (௰௭)

வடமேற்காகுந்திசையதனில் வாயுமூழ்கவந்தகந்தடரவுந்
திடமார்விட்டத்தையொழிப்பதற்குத் திகைமுமபடியுந்தீர்த்தத்து
புடவிதனில்வாழ்மாந்தரதிற் பொருந்திமூழ்கிப் பாவமதிலேழ்கிற்
படவாயரவத்தால்வருந்தும் பயமொழிதல்... (௰௮)

தனதனவுணர நந்திதியைத் தமதுவலிபாற்பறித்தகல
வனையவிடுக்கத்தால்வருந்தி யணியார்மயிலைமலையடைந்து
யினியவடபாலொருதீர்த்த மியற்றிமூழ்கியேகுகிதி
தனையுற்றுனித்தடமூழ்கிற் சகத்தோரிழந்தபொருள்பெறுவார் (யகூ)

ஈசானத்திலீசானத் தெம்மான்சிருட்டித்துறுதீர்த்த
மாசாபாசத்தாலுழலு மான்மாக்களுக்கங்கருமையுடன்
பேசற்கரிடமெஞ்ஞானம் பிறப்பித்தென்றுஞ் சிவலோக
வேசமாக்குமந்தீர்த்தன் னீமையெவர்க்குச்சொலுநீரே (உய)

வள்ளலுறையுந்திருச்சயில மதனிற்கீழ்பால்வரைச்சரியிற்
கள்ளக்கயலேவாட்டுவிழிக் கன்னியார்களிருவர்களு
முள்ளமகிழ்வாய்நிருமிதஞ்செ யுவப்பிலாடியச்செவ்வேள்
வின்னற்கரியவுவகையினுல் வேட்பமகிழ்செய்தடமதுவே (உக)

அத்தீர்த்தத்தின்பெயர் தெய்வயானைவள்ளி தீர்த்தமதா
மத்தீர்த்தத்தின்மூழ்கியன்பி னெழிலார்மடவாரொனையாருஞ்
சத்தியிருவர்தமைவணங்கிற் றங்கள்கொழுநர்தமைத்தணந்து
நத்தாதுறினுஞ்சேட்செலினு நண்ணிமருவிவாழ்ந்திருப்பார் (உஉ)

(வேறு)

பாலசித்தரினிதுற்றபீடமதில் பத்தொடைந்தினரசார் வரும்
பாலசித்தனெனுமாதவக்குரிசில் பத்தகோடிகள்பரிப்பவன்
வேலணிந்தசிவசுப்ரமண்யனென மேவுஞானகுணசேகரன்
வேலமைந்தமயூராசலச்சிகரி மெய்த்திருப்பணிகளாற்றினேன் (உங)

சத்தமாதிவிடயத்தைமுற்றுபு தனக்குளேவயம தாக்கினேன்
சத்துவத்திடையுருந்திருப்பன் மறைதன்கருத்தையள விட்டவ
னுத்தமர்க்குளுயருத்தமன்னுலக மித்தையொன்றனி யொழித்தவன்
பத்தர்தங்களுளம்வைத்தகாமிய மனைத்தையும்பரி வினிபவன் (உச)

ஆகமம்பலகலைக் கியானமறிகின்றவன் றரியநின்றவன்
வாகுலாவிய வுருத்திராக்கமொடு நீறுதாரணம் வயங்குசெம்
பாகமார்பியுயர் காவிமெல்லுடைகள் பால்கொளன்புறு திவேதனம்
யோகமானதவ மேன்மைமிகையெழி லூற்றவற்குநிக ரியாவரே. (உரு)

(வேறு)

அத்தகுசித்தன் மனத்தில்விருப்பொடு மம்மயிலைக்கிரிமேற்
பத்தியின்மிக்க வியற்றிவிளங்கிடு பண்புறுநற்கூப
முத்தனருட்கட லென்னவுமத்தன் முடித்தலமேனடியாஞ்
சத்திவிருப்பொடு புத்திரனுக்கெதிர் தந்தனளென்னலுமாம். (௨௬)

அமராநந்தந்தீவினையகல யணிநீர்ஞாலமதி
லமராநந்தங்கொண்டு விளங்கியதனறியு மார்மதுவார்
ஞிமிராநந்தங்கொண்ட கடம்பணிவிமலனபதநல்கும்
குமாராநந்தக்கூப மெனும்பெயர்கொண்டுயர் தீர்த்தமதே. (௨௭)

(வேறு)

தரிசனத்தாற்பரிசத்தால் மூழ்குதலாலருந்துதலாற் சனனநீருங்
கரிசறுமாதவமுண்டாங் கவலையிலையவலமிலை கல்வியுண்டா
மரியயன்மாதவமுனிவர் தம்பதமுங்கருதினெய்து மல்லறீரு
மிருவினையுமொருங்ககலு மென்னினதன்சீரினைத்தென் றிசைத்தற்பாற்றோ

எவ்வுலகுந்தொழுந்தலங்க ளின்மயிலைமலைத்தலமே யிறைமையாகு
மெவ்வுலகுந்தொழுந்தீர்த்தங் களிற்சித்ததீர்த்தமதே யிறைமைத்தாகு
மெவ்வுலகுந்தொழுமூர்த்தி களின்மயிலைமலைமுருக னிறைவனாவ
னெவ்வுலகுந்தொழுமடியார் தமின்மயிலைமலைதொழுவா ரிறைவராமே

அத்தலத்தின்முருகனமராலயத்திற் றிருப்பணியொன் றாற்றுவோர்க
ளெத்திசையுமபுகழ்மருவ விவ்வுலகந்தனில்வாழ்ந்தின் பிகந்தேயந்த
முத்தநகையரம்பைநலா ரிருபுறஞ்சாமரையிரட்ட மொழியொணாத
சித்திரமாமரியணைமேற் பொன்னுலகினரசுசெய்வர் திகழ்ந்துமாதோ

அளியாருந்தடம்பொழில்சூ டிருமயிலைமலைக்குமரற் கன்பினோடு
மொளியாருந்திருவிளக்கொன் றிடுவோர்கள்வானுலகத் தோங்கியாங்குக்
களியாருமரம்பையர்க ளாயிரந்தீபங்கரத்தி லேந்தவாழ்வார்
துளியாருமலர்மாலை யணிவோர்கற்பகநிழலிற் றுன்னுவாரால், (௩௧)

எந்தையறுமுகனமருந் திருமயிலைமலைத்தலத்தி லின்பத்தோடுங்
கந்தமலர்த்தடமொன்று கண்டவர்கள்பிறப்பிறப்பைக்காணாராகி
யந்திவண்ணனமர்கயிலா யத்தமர்வர்துன்பமெலா மகன்றேயன்னோர்
சிந்தையில்வைத்தெழுமகிழ்வை யாவரின்னதென் றுரைப்பர்தெரிந்துமாதோ.

(௩௨)

பாலிளநீரளையுதகமெண்ணெயருங் கனிகளிவை பண்பிற்றேடி
வேலனுக்கங்கபிடேகம் புரிந்தோர்கடேவரல்லார் மேன்மேற்கூடிச்
சீலமுடன்பனிநீரா லாட்டியரும்புனலாட்டிச்செவ்வாயூறுங்
கோலவமுதூட்டிமுலைத் தலத்திலணைத்திடுநலனைக கூடுவாரால். (௩௩)

அணிமயிலைமலையில்வள ரறுமுகவற்கோராண்டை யன்பிற்றந்தோர்
பணியவமரர்களியாரும் பொற்பீதாம்பரந்தரிப்பர் பரமன்பாலற்
கணியொன்றுதந்தோர்கண் மணிகட்புனைந்தெங்காலு மழிவிலாம
லணியவளமியாவும்பெற் றிருந்திடுவரவர்பெருமை யென்சொல்வேனே

கார்த்திகையார்திருமுலைப்பா லுண்டிடுஞ்செவ்வாயெழிலார் கந்தனுக்கு
நேத்தியதாமன்னநிவேதனஞ் செய்வோராவானுலக நிருபராகிய
பார்தனிதெற்கரிதெனுந் தேவமுதமதைத்தினமா ரபருகியென்றுங்
கூர்த்தபசிபிணியில்லாப் பேறடைவர்வீறு புகழ்கொண்டிடுமாதோ (௩௫)

அப்பதியிற்செயுந்தரும மனுவத்துணையாயினுமேரு வளவாமன்றித்
தப்புறவாற்றியபாவ மெத்துணையேனுந்தினையாஞ் சாமியாத
முப்பொழுதுங்கண்டுதரிசித்தவர்கள் வினையகன்று முதல்வராகி
யெப்படியுமிருந்தபடிபுரந்திடுவ ரவர்சிறப்பையார்சொல்வாரால் (௩௬)

முருகவேளுநஞ்சிந்தரும்போர்தனின்முயன்றே
யொருமையாகப்பின்னமர்ந்துல களித்திடுமலைப்பா
லுருகிவந்தடிபணிபவர்தங்களுள்ளுவக்குந்
திருமலிந்துயர்சிவனடித்தாமரைசேர்வார் (௩௭)

இனிமையாமயிலைத்தலத்தொருபகலிருந்தோர்
வினைகருங்கழனமன்னராய்மாநிலம்புரப்பார்
துனைவிலோர்மதியிருந்தவர்மாதவஞ்சூழ்வார்
கனிவினோர்சமையிருந்தவர்வான்பதிகாப்பார் (௩௮)

இங்கடோறுஞ்சேர்கார்த்திகைநாட்களிற்சிறக்குந்
துங்கமஞ்ஞையுங்கிரியினிற்றூயநீராடி
யெங்கணுமைகனிணையடியருச்சனைபுரிவோர்
தங்குபேரருட்செல்வமுந்தழைத்துவாழ்குவரால்.

மீனமாமதிப்பூரமுத்திரமெனும்வியனன்
ஞானநாயகனறுமுகப்பரமனல்லருள்சேர்
வானளாவிரதாதியுற்சவத்தினில்வணங்கு
மானபுண்ணியர்பரனுருமேவிலைகுவரால் (௬௰)

வானினுஞ்சுவர்க்காதிபன்முதலவானவரு
மேனையேழ்திசையிறைவருமியக்கருமெவரு
மானவன்பினோடாறுமுகற்போற்றுறவடையு
மானவித்தலமெத்தலங்களொனவகுப்பாம். (௬௧)

வேறு.

உவமைசொலறகரியதெனுமயிலைமலைத்தலப்பெருமைக்குவமைகூறுங்
கவனமுற்றேனதனைநினைத்திடுங்காலந்தொறுநகைப்பென் கண்ணேதோ
தவமலியுஞ்சிவஞான பாலசித்தசுவாமிபரகுரு தன்மையாற்றுற் (ன்றுந்
புவனமதிலெவர்புகழ்தற் கடங்குவதத்தலமகிமை புகலுங்காலே. (௬௨)

வேறு.

இடபத்திங்களினேற்றிமாரனு
ளடைவிற்கூடியவத்தினந்தன்னிலே
தடமுலாவும்மயிலைத்தலத்தில்வேற்,
படையினன்வந்தமாந்தனன்பண்பினே (௬௩)

தங்கண்மாமியென்றோர்வகைசாற்றிடுந்
துங்கநாளின்மிதுனமதிதனின்
மங்கைவள்ளிதெய்வானையிருவரு
மிங்குமாமயிலைக்கிரியெய்தினர் (௬௪)

ஒற்றிடேர்மிடபம்மதி யுட்பூசங்
கற்றையங்குழற்கன்னியர்தங்களை
மூற்றவும்பெணையாளுமுருகவேள்
கொற்றமாமணங்கொண்டனனமரோ (௬௫)

எங்கள்சித்த னிருங்கடல்வந்தநாட
சிங்கமாமதி சீர்மிர்கசீரிடம்
திங்கண்மாமிது னந்திருவாதிரை
பொங்கிலிங்கமதாய் பொலிவெய்தினன் (௬௬)

இன்னநாளி லிலங்கிடுமன்பர்கள்
சொன்னயாமயிற் றூயமலைதொழு
தன்னமேழுதற் றுணைகளாற்றிடின்
மன்னவாழ்வு மலிந்துமகிழ்வரால் (௪௭)

(புராணவிசேடம்-வேறு.)

துன்றுகதிர்வேற்குமரப்பெம்மானின்பந்
தூயதவச்சிவஞானபாலசித்தற்
கன்றுதருமயிலைமலைப்புராணந்தன்னை
யகிறைபோன்பிறெடுமனுகிக்கேட்போர்
வென்றியுயர்புகழ்பெறுவர்கல்விமேன்மை
விழுச்செல்வமனைபுதல்வர்பேறுமேவிப்
பொன்றலிலாவானுலகபோகமூழ்கிப்
புண்ணியராய்ச்சிவபதத்தைப்பொருந்திவாழ்வார் (௪௮)

வேறு.

என்றுசதுர்மறைக்குரிய சூதபுராணிகன்பரம னிருதாடன்னை
யென்றுமறவாதிருத்தி மயிலைமலைக்குகனுடை யினிமையெல்லா
மென்றுலகிலிருளகற்றி யொளிவிடுக்கும்பரிசதுபோ லியாருங்கேட்க
வென்றுகடைக்குங்கருணைப் பெருமையினுலருமையொடு மியம்பினு
(னே (௪௯)

ஓங்குறுதண்ணளிச்சூத னைமிசாரண்யமுனி வோருக்கோதத்
தாங்கரியவானந்தமீக்கூர மொழிகுழறத் தாரைகண்ணிற்
பாங்கொடுவாரப்புளகம் பொடிப்பவுருகேசனிரு பதுமதாளைத்
தீங்ககலச்செங்கரங்கள் கூம்பவுளத்திருத்திமகிழ்சிறந்தாரன்றே(௫௰)

வேறு.

வாழிமாமயில்வேதண்டம் வளரறம்வேதம் வாழி
வாழியெம்பாலசித்தன் மலரடிநினாகோன் வாழி
வாழியாறெழுத்துங்கண்டி மணியபூதி வாழி
வாழிநல்லடியார்வானம் வளமெழுமுலகம் வாழி

தீர்த்தச்சருக்கம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-௯௨௭.

ஸ்ரீமயூராசலபுராணம்
முற்றுப்பெற்றது.